# கல்கி

## பொருளடக்கம்

**விரோதிகிருது பங்குனி 20 ★ ஏப்ரல் 2, 1972**



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



# நீடித்து உழைக்கும் துணிகள் எவை?



# டுவின் டஸ்கர்

டிரில் • பாப்ளின் • காபர்டைன் • டஸூர்
முதலியன

 **மதுரை மில்ஸ்** மதுரை, தென் இந்தியா

Bensons 1841 B/ TAM

---




துணிச்சலவை, நீர் சுத்திகரிப்பு,
சூழ்நிலைச் சுகாதாரம்,
ஆகிய அனைத்துக்கும்



## காவேரி பிராண்ட் ஸ்டேபிள் ப்ளீச்சிங் பவுடர்

கையில் சுலபமாக
எடுத்துச் செல்லக்கூடிய பைகளில் கிடைக்கும்



மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை-2 • சேலம் ஜில்லா • தமிழ் நாடு

கல்கி

மலர் 31
இதழ் 36



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# கறுப்புப் பணமும் கறுப்பு அரசாங்கமும்

**பா**ரதத்தின் முன்னாள் பிரதம நீதிபதியாகிய ஸ்ரீ வாஞ்சூ அவர்களின் தலைமையில் அமைந்த நேர்முக வரி விசாரணைக் குழுவின் பரிந்துரை, தலைவர் ராஜாஜி நீண்டகாலமாக எடுத்தியம்பி வரும் உண்மைகளை அழுத்தம் திருத்தமாக வலியுறுத்துகின்றன.

வரி விகிதம் மிக மிகக் கடுமையாக இருப்பதாலேயே வரியை ஏய்த்துக் கறுப்புப் பணம் சேர்ப்பதில் பணக்காரர்களுக்குச் சபலம் உண்டாகிறது என்றும், அரசாங்கமே நல்லவர்களையும் தவறான வழியில் செல்ல ஊக்குகிறது என்றும் ராஜாஜி பன்முறை கூறியுள்ளார் அல்லவா? இதையே ஸ்ரீ வாஞ்சூ குழு தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டுகிறது. மக்களின் மன இயல்பையே புரிந்துகொள்ள இயலாத ஓர் அரசாங்கத்தின் விபரீத சோஷலிஸக் கொள்கைதான் கறுப்புப் பணத்துக்கு மூலாதாரமாகியிருக்கிறது! இந்த ''சோஷலிஸ''த்தால் சர்க்கார் குறைந்தது 1400 கோடி ரூபாய்க்கான வரியை — அதாவது சுளைசுளையாகச் சுமார் ஐந்நூறு கோடி ரூபாய் வருமானத்தை—பிரதி வருஷமும் இழந்து வருகிறது! அந்த இழப்பு ஒருபுற மிருக்கட்டும். மக்களுக்குத் தார்மிக ரீதியில் ஏற்பட்டுள்ள இழப்பு இதனிலும் கொடியது. 'புண்ணிய' பாரத தேசம் என்று பேசப்படும் நம் நாட்டில், சுமார் ஏழாயிரம் கோடி ரூபாய் அளவில் கறுப்புப் பணத்தைக் கொண்டு வியாபார வர்த்தக நடவடிக்கைகள் நடந்திருக்கலாம் என்று குழு கூறுவது தேசத்துக்கு எத்தகைய அவமானம்! இந்த அவமானத்தின் பொறுப்பை அரசாங்கமே முக்கியமாக ஏற்க வேண்டும். குற்றம் செய்பவரை விடக் குற்றம் செய்யத் தூண்டுபவர் தானே அதிகக் கண்டனத்துக்கு உரியவர்?

வரி விதிப்புக் குற்றம் மட்டுமல்ல, இன்னொரு மாபெரும் குற்றமும் அரசாங்கமே செய்து, கறுப்புப் பண விநியோகத்தை 'ஜாம் ஜாம்' என்று நடத்தி வருகிறது. பெர்மிட் — லைசென்ஸ் விநியோக அதிகாரத்தைக் காட்டி, கறுப்புப் பணத்திலிருந்து கட்சிக்கு 'நன்கொடை' பெறுகிற குற்றம்தான் அது. ராஜாஜியே பேசுகிறாரா என்று வியக்கும்வண்ணம் வாஞ்சூ குழுவானது, கறுப்புப் பண சிருஷ்டிக்கான காரணங்களைக் கூறுகையில், ''கட்டுப்பாட்டுப் பொருளாதாரம், அதன் அங்கமான கன்ட்ரோல் — லைசென்ஸ், அரசியல் கட்சி நன்கொடைகள்,.... நன்னெறிகளில் ஏற்பட்டுள்ள தாழ்வு'' இவற்றைக் குறிப்பிடுகிறது. மிகப் பெரிய தொகைகளை நன்கொடையாகப் பெறுகிறது ஆள்கிற கட்சி. தற்கால வரிவிதிப்பு முறையின்கீழ் எவரும் அவ்வளவு நன்கொடை வழங்குமளவுக்கு 'வெள்ளை'யான முறையில் பணம் சேர்க்க முடியாது என்பது அரசாங்கத்தினர் உள்பட எல்லாருக்குமே தெரியும்! கறுப்புப் பணத்தை நன்கொடையாகத் தந்து, மேலும் அதிக அளவுக்குக் கறுப்புப் பணத்தைத் திரட்ட லைசென்ஸ் வசதிகளைப் பெற முடிகிறது. ஒருபுறத்தில் 'சோஷலிஸ' வரிவிதிப்புக் கொள்கையால் கறுப்புப் பணத்தின் சிருஷ்டிக்குக் காரணமான அரசாங்கமே, இன்னொரு புறத்தில் தன் கட்சித் தேர்தல் வெற்றிக்காக அந்தக் கறுப்புப் பணத்தில் ஒரு பகுதியைப் பெற்று மேலும் மேலும் கறுப்புப் பணம் ஊற்று எடுக்கத் துணை புரிவதைப் பார்க்கிறோம்.

தேர்தலில் பணப் பேய் இவ்வளவு பலம் பெற்றிருக்கக் கூடாது என்பதையும் வாஞ்சூ குழு அறிவுறுத்துகிறது. இப்போது வேட்பாளர் பல இனங்களில் செய்கிற செலவுகளை அரசாங்கமே ஏற்று, தேர்தல் செலவுகளை நல்ல கண்காணிப்பில் கொண்டு வந்து, தூய்மை நிலவச் செய்ய வேண்டும் என்கிறது குழு. தேர்தலில் வாகன வசதி, அடையாளச் சீட்டு விநியோகம் முதலியவற்றை வேட்பாளரிடம் விடாமல் அரசாங்கமே பொறுப்பேற்க வேண்டும் என்ற ராஜாஜியின் நீண்டகால யோசனையை இப்போது நினைவு கூரலாம். ஆக, வரிவிதிப்புக் கொள்கையில் உள்ள மாபெரும் தவறு, பெர்மிட் — லைசென்ஸ் துஷ்பிரயோகத்தின் தீய விளைவு, பண பலத்தால் தேர்தல்களில் ஏற்பட்டுள்ள மாசு — இவற்றை வாஞ்சூ குழு ஒளிவு மறைவின்றி வெளியிட்டிருக்கிறது.

கறுப்புப் பணம் சேர்க்கும் பழக்கம் தொலைய வேண்டுமானால் முதலில் நமது

அரசாங்கம் 'வெள்ளை'யாக வேண்டும். அதாவது, வாஞ்சூ குழுவின் பரிந்துரை களைக் கிடப்பில் போட்டுவிடாமல், அவற்றின் உண்மைகளை உணர்ந்து காரி யத்தில் காட்ட வேண்டும். உயர் மட்டத்தில் வரிவிகிதத்தைக் குறைக்க வேண்டும்; இதனால் நேர்மையான தொழில் நடவடிக்கைகள் ஒளிவின்றிப் பெருகித் தொழில்வளமும், சர்க்கார் வருமானமும் ஓங்கும். கணக்கில் காட் டாமல் கட்சிக்கு நன்கொடைகள் பெறுகிற வழக்கத்தை விடவேண்டும். பெர்மிட் — லைசென்ஸ் விநியோகத்தைக் கட்சிப் பற்றற்ற ஒரு சுதந்திர வாரியத் திடம் விடவேண்டும். இந்தக் காரியங் களை எந்த அளவுக்குச் செய்கிறதோ அந்த அளவுக்கு அரசாங்கத்தின் கறுப்பு உதிரும்; தேசத்தின் கறுப்பும் உதிர்ந்து வெண்மை படரும். மீண்டும் பாரத நாடு தார்மீகப் பொலிவு பெறும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

## காரியம் நடக்கட்டும்!

வெளியார் தலையீடின்றி, தங்களுக்குள்ளேயே பேசிப் பிரச்னைகளைத் தீர்த்துக்கொள்ள வேண்டும் என்று இந்தியா, பாகிஸ்தான் ஆகிய இரு நாட்டு அரசாங்கங்களும் எண்ணுவது நல்லதே. இதே போல் மற்ற நாடுகள் இப்பிரச்னையில் தலையிட விரும்பாமலிருப்பதும் நல்லதுதான். ஆயினும் இப்படிச் சொல்லிக் கொண்டு எவருமே எதுவுமே செய்யாமலிருப்பது நல்லதல்ல. வெளியார் மத்தியஸ்தம் இன்றி நாமே விவகாரங்களைச் சரிப்படுத்தித் தீர்வு காண்பதற்குரிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.







## தி. மு. க. செய்யும் தீங்கு

போதைப் பானங்களுக்கு இளைஞர்களை அடிமையாக்குவதற்குத் தமிழ் நாட்டு அரசாங்கம் மேன்மேலும் வலை வீசியபடி இருப்பதைக் கண்டு வருந்துகிறேன். தமிழக அரசாங்கத்தை அகற்றி விடுவதற்கு இந்த மதுபான விஷயம் ஒன்றே போதும். அரசியல் சட்ட சாஸன ரீதியில் பார்த்தால், சாஸனத்தின் நான்காம் பகுதியில் மது விலக்கு பற்றிக் கூறியிருப்பதைத் தமிழக அரசு அப்பட்டமாக மீறியிருக்கிறது.

## உடன்படிக்கை எதற்கு?

சுதந்திர வங்காள தேசத்துக்கும் இந்தியா

வுக்குமிடையே நிலவும் நட்பு ஓர் இயற்கை யான விஷயம். தானகவே ஏற்பட்டுள்ள இந்த நட்பை வலியுறுத்த உடன்படிக்கை யும் கையொப்பமும் தேவையில்லை. உண்மை யில் நாம் எதற்கு முயலவேண்டும் எனில், பூட்டோவின் பாகிஸ்தானுக்கும் இந்தியா வுக்குமிடையே இருபத்தைந்தாண்டு ஒத் துழைப்பு நிலவுவதற்காக ஓர் உடன்படிக்கை செய்து கொள்வதற்கேயாம். இது கடின மான காரியம். ஆயினும் முயற்சி எடுத்தாக வேண்டும். இருநாடுகளும் வீண் கஷ்ட நஷ்டங் களுக்கு ஆளாகாமல் காப்பாற்றப்படுவதற்கு இதுவே வழி.

## கல்லூரிக் கல்வி

**1891**ம் ஆண்டு டிசம்பர் மாதம் நான் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறினேன். அப்போதே இந்திய சரித்திரம், ஆங்கிலேய சரித்திரம் ஆகியவற்றில் விரிவாகக் கல்வி பெற் றிருந்தேன். அதன்பின் மேலும் இரண்டு வரு ஷங்கள் படித்து இன் னெரு பரீட்சை கொடுத் தேன். எஃப். ஏ. என்று அந்த இரண்டாண்டுப் படிப்புக்குப் பெயர். இந்த இரண்டாண்டு களில் கணிதம், பௌதி கம், ரசாயனம், கிரேக்க –ரோம சரித்திரம், உடற் கூறு இயல் ஆகியவற்றில் வல்லுநர்கள் எழுதிய அழகிய சிறு புத்தகங் களைப் படித்து நல்ல விஷய ஞானம் பெற முடிந்தது. ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியரின் ஒரு நாட கம் உள்படப் பல புத்த கங்கள் படித்து அம் மொழியில் தேர்ந்த அறிவு பெற முடிந்தது. பட்டப் படிப்புக்காக விசேஷமாக ஒரு பாடத் தைப் பயிலு முன் இவ் வாறு இரு ஆண்டுக ளுக்கு ஒரு வகுப்பு வைத் தது நல்ல ஏற்பாடு என்று எண்ணுகிறேன். இப் போது பி. யு. ஸி. என்று ஒரே வருடப் படிப்பு வைத்திருக்கிறார்கள். பட் டப் படிப்பு தொடங்கு பவர்களிடம் பழைய காலத் தேர்ச்சி இல்லை எனக் காண்கிறேன்.

பட்டப் படிப்பு பயி லும் மாணவர்களுக்கு விசேஷமாகப் போதகர் களின் உதவியும் கிடைக்க வில்லை. கஷ்டப்பட்டு நெட்டுருப் போட்டு மண்டையில் திணித்துக் கொள்ளுகிறார்கள். பட்டதாரிகளுக்குரிய அடிப்படைப் பொது அறிவு பெருமலே பி. ஏ.க்களாகவும், பி. எஸ்ஸி.க் களாகவும் ஆகிவிடுகிறார்கள். முன்பிருந்ததுபோல் பள்ளிப் படிப்புக்கும் பட்டப் படிப்புக்கும் இடையில் இரு வருடப் படிப்புத் திட்டத்தை ஏதேனும் ஒரு முறையில் ஏற்படுத்துவது நன்மை பயக் கும் என நம்புகிறேன். பொறி இயல், மருத்துவம் போன்ற தொழிற் கல்வி ஏற்ப வர்களும்கூட மேலும் ஓராண்டு பொது விஷயங்களைப் படித்தறிய வேண்டும் எனக் கருதுகிறேன். இதனுல் அவர்களது கல்விப் பயிற்சிக்கு ஓராண்டு கூடும் என்பது வாஸ்த வம். சர்வகலாசாலைத் தலைவர்களும், அவர்க ளது சகாக்களும் எந்தக் கோஷ்டியின் நெரிசலுக்கும் ஆட்பட்டு அவசரப்படாமல் இந்தப் பிரச்னையைக் கூர்ந்து பரிசீலிக்க வேணும்.



பொல்லாத மிருகங்கள் வாழ இடமளிக்கும் கானகம்



# வீட்டில் சிறை

நாடோடி






**பா**கிஸ்தானில் இப்பொழுது ஒவ்வொருவராக வீட்டில் சிறை வைக்கப்படுகின்றனர். முன்பு யாஹ்யாகான் வீட்டில் சிறை வைக்கப்பட்டார். இப்பொழுது விமான தளபதி ரகிம்கானும், லெப்டினன்ட் ஜெனரல் குல்ஹஸ கானும் வீட்டில் சிறை வைக்கப்பட்டிருக்கின்றனர்.

தமக்கு வேண்டியவர்களை வீட்டிலேயே சிறை வைப்பது என்னும் வழக்கத்தைப் பூட்டோ ஏன் மேற்கொண்டிருக்கிறார் என்பது தெரியவில்லை. ஒருவேளை, வேண்டாதவர்களை யெல்லாம் சிறை வைப்பதானால், அதற்குச் சிறைச்சாலைகள் போதாது. அவரவர்கள் வீட்டில் அவரவர்களைச் சிறை வைப்பது என்று ஆரம்பித்தால், எல்லாரையுமே சிறை வைத்து விடலாம் என்று அவர் நினைக்க ஆரம்பித்து விட்டாரோ !

ஆனால் இந்த முறையில் வீடு இல்லாதவர்களைச் சிறை வைக்க முடியாது; வீடு உள்ளவர்களிலும் சொந்த வீடு வைத்துக் கொண்டிருப்பவர்களைத்தான் சிறை வைக்க முடியும். ஏனெனில், வாடகை வீட்டில் உள்ளவர்கள் மூன்று மாதம் வாடகை கொடுக்காமல் நிறுத்தினால், உடனே வீட்டுக்காரர் அவர் மீது வழக்குத் தொடர்ந்து அவரை வீட்டை விட்டுத் துரத்திவிடலாம் அல்லவா ?

ஆகவே, இதைத் தடுப்பதற்காக, யார் யாரைப் பூட்டோ வீட்டில் சிறை வைக்கிறாரோ, அவர்கள் வீட்டு வாடகையையும் பூட்டோவே கொடுக்க வேண்டியிருக்கும். அல்லது முன்கூட்டியே, வீட்டுச் சொந்தக்காரரை வழக்குத் தொடுக்காமல் தடுக்க, அவரையும் வீட்டில் சிறை வைக்கவேண்டியிருக்கும்.

இந்தப் பாகிஸ்தான் எப்படியாவது போகிறது போங்கள் ! பாகிஸ்தானில் வீட்டில் சிறை வைக்கும் வழக்கம் அதிகரித்துக்கொண்டிருக்கிறதே என்று கவலைப்படும் மக்கள், இந்தியாவில் என்னைப் போல் லட்சோப லட்சம் மக்கள் சிறை வைக்கப்பட்டிருப்பதைத் துளியாவது எண்ணிப் பார்த்தார்களா!

என்னைப் போல் அநேகர் வீட்டில் சிறை வைக்கப்பட்டிருக்கின்றனர் என்கிற விஷயம் முதலில் இவர்களுக்குத் தெரியுமா என்பதே சந்தேகம். என் வீட்டு வாசலில் ஒரு போலீஸ்காரரோ, ஒரு ராணுவ வீரரோ, துப்பாக்கியும் கையுமாக நிற்காததால், இவர்கள் நான் வீட்டில் சிறை வைக்கப்பட்டிருப்பதாகவே நினைப்பதில்லை. நான் இந்தப் பத்து நாட்களாக ஏன் வீட்டை விட்டு வெளியே வரவில்லை என்பதை இவர்கள் ஏன் நினைத்துப் பார்க்கவில்லை?

காரணம் நான் வீட்டில் சிறை வைக்கப்பட்டிருப்பதுதான். என்னைச் சிறை வைத்தவர்கள் அரசாங்கத்தினர் அல்ல; என் பால்காரன், மளிகைக் கடைக்காரன், லாண்டரிக்காரன், வீட்டின் சொந்தக்காரர் ஆகியவர்கள்தாம். வீட்டுக்கு வந்து என் மனைவிக்கு எதிரே என்னைக் கன்னாபின்னாவென்று பேச இவர்கள் நடுங்குகிறார்கள்! (அந்த உரிமை தன் ஒருத்திக்குத்தான் இருக்கிறதென்று என் மனைவி சரக நினைப்பதுதான் இதற்குக் காரணம்!) ஆகவே, நான் வீட்டை விட்டு எப்பொழுது வெளியே வருவேன், அப்பொழுது என்னைப் பிடித்துக் கொள்ளலாம் என்று இவர்கள் தெருவிலேயே காத்துக் கொண்டிருக்கின்றனர்.

ஆகவே நான் வீட்டை விட்டு வெளியே போக முடிவதில்லை. ஏண்டா, நான்கு பக்கமும் தோட்டம் உள்ள வீடாகப் பார்த்துக் குடி வந்தோம் என்று இருக்கிறது. பழைய காலம் போல ஒரு வீட்டோடு ஒரு வீடு

சேர்ந்திருந்தால் ராத்திரி வேளையில் மொட்டை மாடிக்குச் சென்று அங்கிருந்து ஒவ்வொருவர் மொட்டை மாடியாகத் தாண்டிக் கடைசியில் தெருவுக்கு வரலாம்.



ஆக, வீட்டுச் சிறையிலிருந்து தப்பிப்பதற்காக, என் உறவினர்களுக்கெல்லாம் பணம் அனுப்பி உதவும்படி கடிதம் போட்டிருக்கிறேன். அது என்னமோ, தெரியவில்லை, நான் எப்பொழுது பணம் கேட்டுக் கடிதம் எழுதினாலும் அதைத் தபால்காரர்கள் கொண்டு போய்க் கொடுப்பதில்லையென்று வைத்திருக்கிறார்கள். இதுபற்றி நான் மேலதிகாரிகளுக்குப் புகார் செய்ய வேண்டும். என் உறவினர்கள் பொய் சொல்லுவார்களா, ''உங்கள் கடிதம் கிடைக்கவில்லை'' என்று? பின்னர் அவர்கள் சொல்வதை நான் நம்பத்தானே வேண்டியிருக்கிறது!

உறவினர்கள் பணம் அனுப்பாததால் என் சிறைவாசம் நீடித்துக் கொண்டே போகிறது.

வீட்டுச் சிறையில் உள்ள ஒரு பெரிய கஷ்டம் எனக்கு இப்பொழுதுதான் தெரிய வந்திருக்கிறது. ஒருவேளை இதைத் தெரிந்து வைத்துக் கொண்டுதான் பூட்டோ, தமக்கு வேண்டாதவர்களை வீட்டுச் சிறையில் வைக்க ஆரம்பித்துள்ளாரோ!

அந்தப் பெரிய கஷ்டம் என்ன தெரியுமா! மனைவி நம்மைத் திட்ட ஆரம்பிக்கும்போது, அவளிடமிருந்து தப்பித்துக் கொண்டு வாசலுக்கு ஓட முடியாததுதான். ''வலை''யாக அகப்பட்டுக் கொண்டு விட்டான் என்று மனைவி இப்பொழுதுதான் தன் ஆத்திரத்தை யெல்லாம் சொல்லித் தீர்த்துக் கொள்கிறாள்!



நான் வீட்டில் சிறை கிடப்பது போனால் போகிறது, யாஹ்யா கான் போன்றவர்களை நினைக்கும் போதுதான் பரிதாபமாக இருக்கிறது. ஹிந்துக்களாகிய நாம் ஒரு மனைவிதான் வைத்துக் கொள்ளலாம். ஆனால் யாஹ்யா கான் போன்றவர்களோ, நான்கு மனைவிகள் வைத்துக் கொள்ளலாம். ஆகவே நான்கு மனைவிகளும் சேர்ந்து கொண்டு, வீட்டை விட்டு வெளியே போக முடியாத ஓர் ஆளை விடு விடு என்று விட ஆரம்பித்தால் அதைவிடக் கொடிய தண்டனை வேறு என்ன வேண்டும்?

## வளவனூர் ஆலயம் வளம் பெறட்டும்!

தென் ஆர்க்காடு வளவனூர் அக்ரஹாரத்தில் தென் மேற்குத் திசையில் ஸ்ரீ வேதவல்லி சமேத ஸ்ரீ லக்ஷ்மிநாராயணப் பெருமாள் தேவாலயமும், வடகிழக்குத் திசையில் ஸ்ரீ அபிராமேசுவரி சமேத ஸ்ரீ ஜகந்நாதேசுவர தேவாலயமும் அமைந்துள்ளன. இந்த இரண்டு தேவாலயங்களுக்கும் திருப்பணி கைங்கரியம் செய்வதற்காக ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் அனுக்கிரகத்தைப் பெற்று ஒரு திருப்பணிக் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. ஆஸ்திகப் பொதுமக்களின் ஆதரவினால் ஸ்ரீ வேதவல்லி சமேத ஸ்ரீ லக்ஷ்மிநாராயணப் பெருமாள் தேவாலயத்துக்குத் திருப்பணி முடிந்து 6–2–72ல் மகா கும்பாபிஷேகமும் விமரிசையாக நடந்தேறியது. ஸ்ரீ அபிராமேசுவரி சமேத ஸ்ரீ ஜகந்நாதேசுவர தேவாலயத்துக்குத் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் நடத்த வேண்டியிருக்கிறது. சுமார் ரூபாய் 25,000 தேவைப்படுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. நன்கொடை கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பவும்: வி. எஸ். விசுவநாத அய்யர், செயலாளர், அக்ரஹார தேவாலயத் திருப்பணிக் கமிட்டி, 20-ஏ, வடக்கு அக்ரஹார வீதி, வளவனூர். (தென் ஆர்க்காடு மாவட்டம்).

# என்ன சேதி?

## இரண்டாவதாண்டு

இலக்கியம் மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதது; இலக்கிய வளர்ச்சி ஏற்படச் சிந்தனை இன்றியமையாதது; சிந்தனை செயலாக உருப்பெறுவதற்கு நல்லதொரு நிறுவனம் இன்றியமையாதது; அந்நிறுவனம் நல்ல முறையில் இயங்குவதற்கு, தொண்டுக்கே தங்களை அர்ப்பணித்துக் கொண்டு அயராது பாடுபடச் சிலர் இன்றியமையாதவர்களாயிருக்கிறார்கள்.

அவர்களுள் இலக்கியச் சிந்தனையின் செயலாளர்களான சகோதரர்கள் திரு லக்ஷ்மணன் திரு சிதம்பரம் இருவரையும் முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். அவர்களுடைய உழைப்பின் பலனைத்தான் ''இலக்கியச் சிந்தனை''யின் மூலம் அடைந்து வருகிறோம்.

13–4–72 தமிழ்ப் புத்தாண்டு தினத்தில் இலக்கியச் சிந்தனையின் இரண்டாவதாண்டு விழா ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் மாலை 6 மணிக்கு நடைபெற விருக்கிறது. சென்ற ஆண்டு (1971) தேர்ந்தெடுக்கப்பட்ட பன்னிரண்டு சிறுகதைகளும் மதிப்பீடு செய்யப்படும். சிறந்த சிறுகதை எழுத்தாளரான திரு சுந்தரராமசாமி அப்பணியைச் செய்வார். தொழில் அதிபரும், கலைச் செல்வருமான திரு என். மகாலிங்கம் அவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்குவார். சென்னைப் பல்கலைக் கழகத்தின் மலையாள மொழித் துறைத் தலைவரான திரு எஸ். கே. நாயர் அவர்கள் ''சுதந்திரத்துக்குப் பின் தமிழ் நாவல்கள்'' என்ற தலைப்பில் சிறப்புரை ஆற்றுவார். அவ்வமயம் பன்னிரண்டு சிறுகதைகள் கொண்ட தொகுதி வெளியிடப்படும். 1971ம் ஆண்டின் சிறந்த சிறுகதையின் ஆசிரியரும் விழாவில் பங்கு கொள்வார். விழா விமரிசையாக நடைபெறப் பிரார்த்திக்கிறோம்.

## ஆசிரியர்களுக்குச் சமய போதனை

ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசாரியாளின் அருள் ஆதரவில் சென்ற ஆண்டுகள் போல, இவ்வருடமும் கோடை விடுமுறையின்போது பள்ளி ஆசிரியர்களுக்குச் சமய நீதி போதனை வகுப்புக்கள் அடியிற் காணும் கேந்திரங்களில் நடைபெறும்:

| மாவட்டம் | பயிற்சிக் கேந்திரம் |
|---|---|
| சென்னை, செங்கற்பட்டு, தென் ஆர்க்காடு, வட ஆர்க்காடு | வேலூர் |
| தஞ்சை, திருச்சி | திருச்சி |
| தர்மபுரி, சேலம், கோயமுத்தூர், நீலகிரி | சேலம் |
| திருநெல்வேலி, மதுரை, ராமநாதபுரம், கன்யாகுமரி | ராமநாதபுரம் |

மே மாதம் இந்த வகுப்புக்கள் நடக்கும். பங்கு பெற விரும்பும் ஆசிரியர்கள், ''புலவர் பு. மா. ஜயசெந்தில்நாதன், 69, லிங்கப் பையர் தெரு, காஞ்சிபுரம்–2'' என்ற முகவரிக்குத் தெரிவிக்க வேணும். பயிற்சியின் போது தங்க இடமும், உணவும் இலவசமாக ஏற்பாடு செய்து தரப்படும்.

## நிர்வாகத் திறனும் கலைத் திறனும்

கிரிகரி பெக் என்ற பெயரை ஆங்கிலத் திரைப்படங்களுக்கு அபூர்வமாகப் போகிறவர்கள்கூட நன்கு அறிவார்கள். எத்தனையோ திரைப்படங்களில் அற்புதமாக நடித்துப் பெரும் புகழையும் பலப்பல விருதுகளையும் பரிசுகளையும் பெற்றவர் கிரிகரி பெக். அமெரிக்காவிலே இதைவிடப் பெரிய கௌரவத்தை யாரும் பெற இயலாது என்ற அளவில் ''சுதந்திரப் பதக்கம்'' பெற்றவர். இசைத் தட்டுக்கள் தயாரிக்கும் நிறுவனமான காபிடல் இண்டஸ்ட்ரீஸின் டைரக்டர்களில் ஒருவராக ஸ்ரீ கிரிகரி பெக் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். அமெரிக்காவில் உள்ள காபிடல் இசைத்தட்டு நிறுவனத்தின் தலைவர் ஓர் இந்தியர். திரு பாஸ்கர மேனன் தமது அபாரமான நிர்வாகத் திறன் காரணமாக இந்த உயர் பதவியைப் படிப்படியாக அடைந்தார். டைரக்டர்களில் ஒருவராக வந்துள்ள திரு கிரிகரி பெக் நிர்வாகத் திறனும் குறைவறப் பெற்றவர். அவரை வரவேற்று, கலைத்திறன் நிர்வாகத் திறனுடன் இணைந்து செயலாற்றும் போது இரு ஆற்றல்களும் புதுப் புது வளர்ச்சிகளைக் கண்டு நன்மை பயக்கும் என்று திரு பாஸ்கரமேனன் கூறியுள்ளார். காபிடல் நிறுவனம் மேலும் பல வெற்றிகளைக் காண வாழ்த்துகிறோம்.

திரு பாஸ்கர மேனன் - கிரிகரி பெக்






பிரபஞ்சத்தில் உள்ள சகல வஸ்துக்களையும் அநுபவிப்பதற்காக மனிதனுக்குக் கண், காது, மூக்கு, நாக்கு, சருமம் ஆகிய ஐந்து இந்திரியங்கள் இருக்கின்றன. பஞ்ச இந்திரியங்கள் என்று இவற்றைச் சொல்வார்கள். ரூபத்தைக் கிரகிப்பது கண். சப்தத்தைக் கிரகிப்பது காது. கந்தத்தை (மணம்) கிரகிப்பது மூக்கு. ரஸத்தை (சுவை) கிரகிப்பது நாக்கு. ஸ்பரிசத்தைக் கிரகிப்பது சருமம். இந்த ஐம்புலன்களும் புதிதாக ஒன்றை உண்டாக்கவில்லை. வெளியே இருக்கிற சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தங்களை இவை உணர்கின்றன. வெளியில் இருப்பவற்றை ரேடியோ செட் போல் இவை எப்படியோ அறிந்து பிடித்துக்கொண்டு மூளைக்கு அனுப்பி வைக்கின்றன. காரியம் செய்து புதிதாக ஒன்றைப் படைக்காமல், வெறுமே கிரகிப்பதால் இந்தப் புலன்களுக்கு ஞானேந்திரியங்கள் என்று பெயர். கை, கால் போலக் காரியம் செய்கிற புலன்களுக்கு கர்மேந்திரியங்கள் என்று பெயர். நாக்கு ஞானேந்திரியமாக இருந்து ரஸத்தை உணர்வதோடு, பேச்சு என்ற காரியத்தால் புதிதாக சப்தத்தைப் படைக்கவும் செய்வதால் கர்மேந்திரியமாகவும் இருக்கிறது.

ஞானேந்திரியங்களான ஐம்புலன்களுக்கும் ஆசிரயமாக இருப்பனவே பஞ்ச பூதங்கள் என்கிற ஆகாயம், காற்று, தீ, நீர், மண் ஆகிய பிரபஞ்ச சக்திகள். சப்தம் மட்டுமே ஆகாசத்துக்கு உண்டு. பிரணவம் மட்டுமே ஆகாயத்தில் நிரம்பி யிருக்கிறது. வாயுவில் ஸ்பரிசமும் இருக்கிறது. நம்மீது காற்றுப் பட்டால் நமக்குப் புரிகிறது அல்லவா? நெருப்புக்கு ஸ்பரிசத்தோடு ரூபமும் இருக்கிறது. தீயைக் கண்ணால் பார்க்க முடிகிறது. ஜலத்துக்கு இவற்றோடு ரஸம் (சுவை) என்பதும் உள்ளது. அதை நாம் நாக்கில் விட்டுக் கொண்டு குடிக்கிறோம். மண்ணுக்கு மணமும் உள்ளது. மண் என்றால் மண்ணில் விளைகிற எல்லாம் அதில் அடங்கும். நாம் கண்டும் கேட்டும், ருசித்தும், தொட்டும், முகர்ந்து பார்த்தும் இவற்றை அநுபவிக்கிறோம்.

ஐம்புலன்களே நமக்கு வாழ்வின் சகல ஆனந்தத்தையும் சாத்தியமாக்குகின்றன. நல்ல சாப்பாடு, ரம்மியமான சங்கீதம், சுகந்தம், குளிர்ந்த தென்றல், பூரண சந்திரனின் காட்சி இவை நமக்கு ஐம்புலன்களாலே அநுபவத்துக்கு வருகின்றன. மனிதனுக்கு இந்த ஐம்புலன்களைத் தந்து, இவற்றுக்கு ஆதாரமாக வெளியே ஐம்பூதங்களிலிருந்து தோன்றும் சுவை, மணம் முதலிய அழகுகளையும் வைத்திருப்பவர் ஸ்வாமி. அவரது கிருபையால்தான் சகல இன்பங்களும் கிடைக்கின்றன. நம்மால் ஒரு மணி அரிசி சிருஷ்டிக்க முடியாது. ,ஸ்வாமியே இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்து, அதன் அழகுகளை நாம் அநுபவிப்பதற்காக நமக்கு பஞ்ச இந்திரியங்களையும் சிருஷ்டித்துத் தந்திருக்கிறார். ஆனபடியால் நமது புலன்களால் அநுபவிக்கும் இன்பங்களை ஸ்வாமியின் நினைவோடு அநுபவிப்பதே நமது கடமையும் தர்மமுமாகும்.

அவருக்கு இந்த இன்பங்களை முதலில் அர்ப்பித்து, அவரது பிரசாதமாகவே அவற்றை நாம் ஏற்க வேண்டும். இந்த வழக்கம் நிலைப்பட்டால் ஸ்வாமிக்கு அர்ப்பணம் செய்யத் தகாத எந்தப் பொருளையும் நமது புலன்களால் அநுபவிக்கக் கூடாது என்ற பக்குவம் உண்டாகும்.

பஞ்சேந்திரியங்களால் அநுபவிக்கும் பிரபஞ்ச வஸ்துக்களைப் பரமேசுவரனுக்கு அர்ப்பணம் பண்ணும் மனோபாவனையில் பிறந்தது தான் பஞ்சோபசாரம் என்கிற ஐந்து உபசாரங்கள். கோயிலிலும் வீட்டுப் பூஜையிலும் ஸ்வாமிக்குக் குறைந்தது ஐந்து உபசாரம் செய்ய வேண்டும். ஸ்வாமியின் விக்கிரகத்துக்குச் சந்தனமிடுவது, புஷ்பம் போட்டு அர்ச்சிப்பது, தூபம் காட்டுவது, தீபாராதனை செய்வது, நைவேத்தியம் பண்ணுவது ஆகியனவே பஞ்சோபசாரங்கள். இவற்றில் சந்தனமிடுவது கந்தம் — பிருதிவி தத்துவம் என்ற மண்ணைக் குறிப்பது. புஷ்பம் ஆகாயத்தைக் குறிப்பது, தூபம் வாயுவைக் குறிப்பது, தீபம் தீயைக் குறிப்பது, நைவேத்தியம் அமிருதமாகிய நீரைக் குறிப்பது. எனவே பஞ்ச பூதங்களும் பஞ்சோபசாரத்தில் அடக்கம். பஞ்சபூதத்திலிருந்துதான் நமது பஞ்சேந்திரியங்களின் அத்தனை நுகர்ச்சி வஸ்துக்களும் உண்டாகின்றன. ஆகவே, பஞ்சோபசாரத்தில் ஈசுவரன், பிரபஞ்சம், ஜீவன் எல்லாம் ஒன்றுபடுத்தப் பெறுகின்றன.

# வாழ்வே வாடாத புதுமையின் சித்திரம்

## 'க்ளிக்' அடித்துவைப்பீர்..நிரந்தரம்

எப்போதுமே உங்கள் கையோடிருக்கட்டும் தப்பாத் துணையான க்ளிக் III. மறைந்தோடும் வாழ்வின் மணியான கணங்களை நிரந்தரமாக்கிக் காப்பீர்—கிளைவுமுகம் கண்முன் நிற்பதற்கே.

'இலக்கு வைத்ததும் சடக்' என எடுக்கவே ஆக்பா க்ளிக். காரியத் தகுதி வாய்ந்தது. உண்மை தவறாதது. கையாள எளிது. சிக்கனமிக்கது.

- 120 பிலிம் ரோல் ஒவ்வொன்றுக்கும் பெரிது பெரிதாக (6 x 6 செமீ.) படங்களைப் பெறுவீர்கள்.
- சிறப்பானதோர் தயாரத் தோதுறை, போர்ட்ரெய்ட் லென்ஸ், ஃப்ளாஷ்கன் ஆகியவை மேற்கொண்டு தனிவிலைக்குக் கிடைக்கும்.

தெள்ளத் தெளிவான பிரிண்டுகளுக்கும், என்லார்ஜ்மெண்டுகளுக்கும் கண்டிப்புடன் கோருவீர் ஆக்பா-கேவார்ட் போட்டோத் தாள்களை.

அனுமதிபெற்ற எல்லா ஆக்பா-கேவார்ட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்.

ஆக்பா-கேவார்ட் AG லிவர்குஸன் அவர்களின் கூட்டுறவோடு இவற்றைத் தயாரிப்போர்: தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்.

விலை
ரூ. 56.25
(எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டது. இதர வரிகள் தனி).

SIMOES-AG-1 TAM





ஏகபோக விநியோகஸ்தர்கள்:
**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**
பம்பாய் • நியூ டெல்லி • கல்கத்தா • சென்னை.

® புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான ஆக்பா-கேவார்ட், ஆண்ட்வெர்ப்/லிவர்குஸன் ஆகியோரின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.



ஆக்பா க்ளிக்—இந்தியாவின் உன்னதப் புகழ்பெற்ற காமிரா.

# அலை ஓசை

அமரர் கல்கி

## 22. கன்னத்தில் அறை

சில வருஷங்களுக்கு முன்பு கிட்டாவய்யர், 'கொஞ்சம் சுகவாசியாயிருக்க வேண்டும்; நாகரிகமாக வாழ்க்கை நடத்த வேண்டும்' என்று எண்ணிய போது ஊர்க் குளத்தங்கரையில் அவருக்கிருந்த மேட்டு நிலத்தில் ஒரு சவுக்கண்டி கட்டினார். கூரைக்குக் கீற்றும் விழலும் போட்டார். நாலு புறமும் பிளாச்சு வேலி எடுத்தார். முன் பக்கத்தில் குரோட்டன்ஸுகளும் பின் பக்கத்தில் மல்லிகை, முல்லை முதலிய புஷ்பச் செடிகளும் வைத்து வளர்த்தார். குளத்தங்கரைப் பங்களா என்றும், கிராம முன்சீப் சவுக்கண்டி என்றும் பெயர் பெற்ற அந்த இடத்தைத் தம்முடைய சொந்த ஆபீசாகவும் நண்பர்களுடன் சல்லாபம் செய்யும் இடமாகவும் வைத்துக் கொண்டிருந்தார். முக்கியமாகக் கோடைக் காலத்தில் அந்தக் குளத்தங்கரைப் பங்களா சிலுசிலுவென்று காற்று அடித்துக் கொண்டு வெகு சுகமாக இருக்கும். நாலு பேர் வருவதற்கும் சீட்டுக் கச்சேரி போடுவதற்கும் மிக்க வசதியாக இருக்கும்.

அதெல்லாம் சவுக்கண்டி கட்டிய புதிதில் சில காலம்தான் நடந்தது. அப்புறம் பங்களா வரவரச் சிதிலமாகிப் பாழடைந்து கிடந்தது. இந்த வருஷம், லலிதாவின் கல்யாணம் நடக்க வேண்டியதை முன்னிட்டுக் கிட்டாவய்யர் அந்தச் சவுக்கண்டியைப் புதுப்பித்துக் கட்டியிருந்தார்.

திடீரென்று பங்களாவுக்குள்ளே நுழைந்த சூரியாவைப் பார்த்து லலிதா எரிச்சலுடன், ''இங்கேயும் வந்து விட்டாயா? இங்கே ஒருவரும் பயப்படவும் இல்லை; வீராதி வீரன் சூரியாவின் உதவியும் வேண்டியதில்லை. பொம்மனாட்டிகள் பேசிக் கொண்டிருக்குமிடத்தில் புருஷப் பிள்ளைக்கு என்ன வேலை? சொன்னாலும் கேட்க மாட்டேன் என்கிறாயே?'' என்றாள்.

''பெரிய பொம்மனாட்டிகள் நீங்கள். வாயாடித்தனத்தைப் பார்! அத்தங்கா! நீயே சொல்லு! அண்ணாவிடம் தங்கை இப்படித்தானா பேசுகிறது? நாளைக்குக் கல்யாணம் ஆகி இவள் புருஷன் வீட்டுக்குப் போய் விட்டால் அப்புறம் யார் அவளைத் தேடிக் கொண்டு போகப் போகிறார்கள்? ஏதோ இன்னும் கொஞ்ச நாளைக்குப் பிறந்த வீட்டு மனுஷர்களிடம் பிரியமாக இருக்கக் கூடாதோ? பொம்மனாட்டிகளின் சுபாவமே இப்படித்தான்! அவர்களுக்கு மனத்தில் கொஞ்சமாவது வாஞ்சை என்பதே கிடையாது!'' என்றான் சூரியா.

''ஆமாம்; நீ ரொம்பப் பெரிய மனுஷன்; பொம்மனாட்டிகளின் சுபாவத்தை ரொம்பக் கண்டு விட்டாய்! வாயை மூடு!'' என்று லலிதா மேலும் கடுமையாகப் பேசினாள்.

அப்போது சீதா குறுக்கிட்டு ''லலிதா! அண்ணாவின் மேல் எதற்காக இப்படி எரிந்து விழுகிறாய்? யாருக்கும் தங்

களுக்குக் கிடைத்திருக்கும் அதிர்ஷ்டம் எப்படிப்பட்டதென்று தெரிவதில்லை. தெரிந்தாலும் அதைப் பாராட்டுவதில்லை. சூரியாவைப் போல் எனக்கு ஓர் அண்ணா இல்லையே என்று நான் எவ்வளவோ ஏங்கிக் கிடக்கிறேன். நீயானால் இப்படி வெடுக்கு வெடுக்கென்று பேசுகிறாய்'' என்றாள்.

''சரியாய்ப் போச்சு! நீயும் 'சூரியாவின் கட்சியிலே சேர்ந்து கொண்டாயா?'' என்றாள் லலிதா.

சூரியா குதூகலத்துடன், ''பின்னே எப்போதும் உன் கட்சியையே பேசுவானோ? சீதா உனக்கு எப்படி அத்தங்காளோ, அப்படியே எனக்கும் அத்தங்காள்தானே?'' என்றான்.

''நான் ஒருத்தருடைய கட்சியும் பேசவில்லை. நியாயத்தைத்தான் சொன்னேன். நீங்கள் தங்கையும் தமையனும் தயவு செய்து சண்டை போட்டுக் கொள்ளாதீர்கள்!'' என்று சீதா இதோபதேசம் செய்தாள்.



''நான் ஒன்றும் சண்டை போடவில்லை. இவன் என்னத்துக்காக இப்போது இவ்விடம் வந்தான் என்று கேட்டேன். அவ்வளவுதானே?''

''காரியம் இல்லாமல் நான் வரவில்லை, லலிதா! அத்தை சீதாவைத் தேடினாள். இங்கே இருந்தால் அனுப்பும்படி சொன்னாள். அதனாலேதான் வந்தேன். பம்பாய் அத்திம்பேரிடமிருந்து கடிதம் வந்திருக்கிறதாம். சீதாவின் பேருக்கு வந்திருப்பதால் அவள் வந்துதான் உறையைப் பிரிக்க வேண்டும் என்று அத்தை காத்திருக்கிறாள். நாகரிகமுள்ள மனிதர்களுக்கும் பட்டிக்காட்டு மனிதர்களுக்கும் இதுதான் வித்தியாசம். நம் ஊரிலேயானால் பிறத்தியாருக்கு வந்த கடிதத்தைப் பிரித்துப் படித்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பார்கள்'' என்றான் சூரியா.

''அத்தை கூப்பிட்டாள் என்று முன்னாலேயே சொல்வதுதானே? இதற்கு இவ்வளவு சுற்றி வளைத்துப் பேசுவானேன்? வா, சீதா! நாம் போகலாம்!'' என்றாள் லலிதா.

''நீ என்னத்துக்காக இப்போது போகிறாய்? சீதா போய்விட்டுச் சீக்கிரம் வந்து விடுகிறாள். அதுவரையில் நாம் பேசிக் கொண்டிருக்கலாம்!'' என்று சூரியா சொன்னான்.

''ஆமாம், லலிதா! நீ இங்கேயே இரு! நான் போய் ஐந்து நிமிஷத்திலே திரும்பி வந்து விடுகிறேன்!'' என்று சொல்லி விட்டுச் சீதா புறப்பட்டாள்.

இரண்டு காரணங்களை முன்னிட்டுச் சூரியா லலிதாவை அங்கேயே இருக்கச் சொன்னான். முதலாவது, அத்திம்பேரிடமிருந்து வந்த கடிதத்தை அத்தையும் சீதாவும் தனியாகப் படிக்கப் பிரியப்படுவார்கள். லலிதா கூடச் சென்றால், கடிதத்தைத் தானும் படித்துப் பார்க்க வேண்டும் என்று தொந்தரவு செய்வாள். அம்மாவும் பெண்ணும் ஒரு நிமிஷம் தனித்திருந்து பேசுவதற்கு விடமாட்டாள். இரண்டாவது, லலிதாவிடம் அவளுடைய கல்யாணத்தைப் பற்றிச் சில விஷயங்கள் சொல்ல வேண்டும் என்று சூரியா விரும்பினான். இந்தச் சந்தர்ப்பத்தை விட்டால் அப்புறம் அதற்குச் சௌகரியம் கிடைக்காது என்று எண்ணினான்.

லலிதாவுக்குச் சூரியாவின் மேல் வாஞ்சை இல்லை என்பது கிடையாது. ஆனால் அவள் அன்று சாயங்காலம் 'அவர்கள்' வரும்போது தான் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று சீதா

விடம் பேசித் தெரிந்து கொள்ள விரும்பினாள். அதற்குத் தடையாக சூரியா வந்து சேர்ந்தபடியால் அவ்வளவு கோபம் அவன் பேரில் அவளுக்கு வந்தது. வீட்டுக்குத் தானும் போனால் திரும்பி வர முடியாது; சீதாவிடம் தனியாகப் பேசவும் முடியாது. ஆகையால் சீதா போய்விட்டு வருவதே நல்லது என்று குளத்தங்கரைப் பங்களாவில் இருக்கச் சம்மதித்தாள். மற்றபடி சூரியாவுடன் பேசுவதற்கு வேண்டிய



பொறுமை அவளிடம் அப்போது இல்லை. சூரியா எப்படித் தன் பேச்சைத் தொடங்குவது என்று யோசித்தான். யோசித்துத் தவறான முறையிலேயே தொடங்கினான்.

''லலிதா! உன் அத்தங்காளைப் பற்றி அப்படி, இப்படி என்று என்னவெல்லாமோ அளந்து கொண்டிருந்தாயே? எல்லாம் வெறும் பொய்!'' என்று சொன்னான்.

''எது பொய்?'' என்றாள் லலிதா.

''எல்லாம்தான். 'பம்பாய் அத்தங்காள் ரொம்ப அழகா யிருப்பாள்! ரதி என்றால் ரதிதான்!' என்று எவ்வளவு வர்ணனை செய்தாய்? அதுமட்டுமா? பம்பாயிலிருந்து உன் அத்தங்காள் வந்த பிறகும்கூடப் பக்கம் பக்கமாய்க் கடிதம் எழுதினாயே?''

''ஆமாம், எழுதினேன். அதிலேயெல்லாம் என்ன தப்பு?''

''உன்னுடைய அத்தங்காள் ரொம்ப அழகோ?''

''அழகு இல்லையோ?''

''இல்லவே இல்லை; சுத்த அவலட்சணம்; எந்தக் குருடன் அவளைக் கல்யாணம் செய்துகொள்ள....''

மேலே சூரியா பேச முடியவில்லை. ஏனெனில், ''என்ன? யார் அவலட்சணம்?'' என்று கேட்டுக் கொண்டே லலிதா தன் தமையனின் கன்னத்தில் பளீர் என்று அறைந்தாள்!

கொஞ்ச நாளைக்கு முன்னேயாயிருந்தால் சூரியா லலிதாவின் ஓர் அறைக்குப் பதிலாக அவள் தலையில் ஆறு குட்டுக் குட்டியிருப்பான். இப்போது அப்படியெல்லாம் செய்யவில்லை. கன்னத்தில் விழுந்த அறை அவனுக்கு உற்சாகத்தை உண்டு பண்ணியது என்று தோன்றியது. மலர்ந்த முகத்துடன், ''அடே அம்மா! அத்தங்காளிடம் எவ்வளவு கரிசனம்! சிநேகம் என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்! நான் வெறுமனே சொன்னேன், 'லலிதா! உன் அத்தங்காள் நல்ல இலட்சணமாகத்தான் இருக்கிறாள். புத்திசாலியாயிருக்கிறாள். ஆனால் அழகும் அறிவும் இருந்து என்ன பிரயோஜனம்? பெண்களுக்கு நல்ல இடத்தில் கல்யாணம் ஆவதற்கு இந்தக் காலத்தில் பணம் அல்லவா வேண்டியிருக்கிறது?'' என்றான்.

''ஆமாம்; நம் ஊர்க்காரர்களுக்குப் பணம், பணம், பணந்தான் பெரிது! பணத்துக்காக உயிரை விடுகிறார்கள். இங்கிலீஷ்கார தேசத்திலேயெல்லாம் இப்படி இல்லையாமே? அங்கே ஒருவருக் கொருவர் பிடித்திருந்தால் கல்யாணம் செய்து கொள்வார்களாம். ஏழை பணக்காரர் என்ற வித்தியாசமே பார்க்க மாட்டார்களாம். நம் ஊர்ப் பிள்ளைகள் நீங்களும் இருக்கிறீர்களே! இங்கிலீஷ்காரர்களைப் பார்த்துத் தலையைக் கிராப் செய்து கொள்ளவும், கால் சட்டை, மேல் சட்டை போட்டுக்கொள்ளவும் தஸ்புஸ் என்று இங்கிலீஷ் பேசவும் கற்றுக் கொள்கிறீர்கள். கல்யாணம் என்றால்மட்டும் 'பதினாயிரத்தைக் கொண்டு வா! இருபதினாயிரத்தைக் கொண்டுவா!' என்கிறீர்கள். இங்கிலீஷ்காரர்களிடமிருந்து நல்ல விஷயத்தைக் கற்றுக் கொள்ளத் துப்பு இல்லை!'' என்று லலிதா பொரிந்து கொட்டினாள்.

''லலிதா! முன்னேயெல்லாம் உன்னை ஒரு வார்த்தை பேசச் சொல்வது பிரம்மப் பிரயத்தனமா யிருக்குமே! எப்போது இவ்வளவு பெரிய வாயாடி ஆனாய்? உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிற ராஸ்கல் என்ன பாடுபடப் போகிறானோ, தெரியவில்லையே?''

''அண்ணா! உனக்கு என்மேல் கோபமாக இருந்தால் யாரையோ பிடித்து எதற்காக வைகிறாய்?''

''அப்பப்பா! இனிமேல் வரப்போகிற புருஷனுக்கு இதற்குள் பரிந்து கொண்டு வந்து விட்டாயா? போனால் போகட்டும், லலிதா! உன்னிடம் ஒரு விஷயம் சொல்லுவதற்காகவே முக்கியமாக வந்தேன். அதை இப்போது சொன்னால்தான் சொன்னது; அப்புறம் ஒருவேளை சந்தர்ப்பம் கிடைக்காது.''

''என்ன சொல்ல வேண்டுமோ அதைப் பளிச்சென்று சொல்லேன். மூடு மந்திரம் என்னத்துக்கு?''

''மூடு மந்திரம் ஒன்றும் இல்லை லலிதா! உன்னுடைய நன்மைக்காகவே ஒரு விஷயம் சொல்லப் போகிறேன். சாயங்காலம் யாரோ மதராஸிலிருந்து உன்னைப் பார்க்க வருகிறார்கள் அல்லவா? 'மாப்பிள்ளை'யாக வரப் போகிறவனை உனக்குப் பிடித்திருந்தால் சரி; பிடிக்கவில்லை யென்றால் தைரியமாகச் சொல்லிவிடு. அப்பா அம்மா சொல்வதற்காகவோ வெறுமனே சங்கோசப்பட்டுக் கொண்டோ வாயை மூடிக் கொண்டு இருந்து விடாதே! தெரிந்ததா? கல்யாணம் என்பது சாதாரண விஷயம் அல்ல. ஏதாவது ஒரு சாமான் நமக்குப் பிடிக்காவிட்டால் அதை எறிந்து விட்டு வேறு வாங்கிக் கொள்ளலாம். கல்யாண விஷயம் அப்படியல்ல. ஒரு தடவை முடிந்து போனால் முடிந்து போனதுதான்! அப்புறம் மாற்ற முடியாதல்லவா?''

''சரி, அண்ணா! நானே அப்படித்தான் மனத்துக்குள் தீர்மானம் பண்ணி வைத்திருக்கிறேன். ஒருவேளை எனக்குப் பிடிக்காவிட்டால், நீ என் கட்சியில் இருப்பாய் அல்லவா?''

''கண்டிப்பாய் இருப்பேன். அதைப் பற்றி நீ கொஞ்சமும் சந்தேகப்பட வேண்டாம்'' என்றான் சூரியா.

வீட்டுக்குப் புறப்பட்ட சீதா சவுக்கண்டியின் வெளி 'கேட்'டின் அருகே

# 100% இயற்கை

பதினெட்டு
அபூர்வ மூலிகைகளைக்
கொண்டு
தயாரிக்கப் படுவது
விக்கோ
## வஜ்ரதந்தி

பிரபல ஆயுர்வேத பற்பசை மற்றும் பல்பொடியான விக்கோ வஜ்ரதந்தி 18 அரிய மூலிகைகளிலிருந்து தயாரிக்கப்படுகிறது. இம மூலிகைகளின் தனிப்பட்ட குணங்கள் யாவரும் நன்கு அறிந்ததே. ஆனல் குறிப்பிட்ட அளவுகளில் இவற்றைக் கலக்கும்போது அவற்றின் குணத்திறன் அதிகமாகிறது. விக்கோ வஜ்ரதந்தியின் தற்போதைய செய்முறை பல்லாண்டு ஆராய்ச்சியின் விளைவாகும்.

தவறாது விக்கோ வஜ்ரதந்தி உபயோகித்தால், பற்சிதைவு, பயோரியா, ஈறுகளிலிருந்து சீழ் மற்றும் இரத்தம் வருதல், மூச்சிலே துர் நாற்றம் முதலியவை தடுக்கப் படுகிறது.

ஒரு முறை உபயோகித்துப் பாருங்கள் உண்மை புரியும்.

ஆயுர்வேத
பற்பசை மற்றும்
பற்பொடி.
வாய் ஆரோக்கியத்துக்கு
ஒப்பற்றது.










விக்கோ லாபொரட்டரீஸ்
தாதர், பம்பாய்-14

TML

ஸ்டாக்கிஸ்டுகள்: R. L. கௌடர் & கோ., 59, பந்தர் தெரு, சென்னை-1



காலஞ்சென்ற ஸ்ரீ வி.வி. சாஸ்திரி அவர்கள் குமாரரும், ஹிந்து பத்திரிகையின் கல்கத்தா ஆபீஸில் பணிபுரிந்து வருபவருமான சிரஞ்சீவி காளிதாஸ்க்கும், ஸ்ரீ வி.எஸ். ரெத்னசுவாமி அவர்கள் குமாரத்தி சௌ. லக்ஷ்மிக்கும் திருக்கோயிலூரில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும் அதை ஒட்டி, சென்னை புது உட்லண்ட்ஸ் ஓட்டலில் நடைபெற்ற வரவேற்பு விழாவுக்கும் ஏராளமான உறவினர்களும், நண்பர்களும் நகரப் பிரமுகர்கள் பலரும் வருகை தந்து மணமக்களை வாழ்த்திச் சென்றனர்.

வாழ்க மணமக்கள்

---



சென்னை B & C மில்ஸ் ஸ்தாபனத்தைச் சார்ந்த ஸ்ரீ எஸ். சூரியநாராயணன் அவர்கள் குமாரத்தி டாக்டர் பத்மாவுக்கும், சென்னை பி. எம். ஜி. ஆபீஸின் சீப் அக்கௌண்ட்ஸ் ஆபீசர் ஸ்ரீ பி. முத்துசாமி அவர்கள் குமாரர் டாக்டர் பாலசுப்ரமணியன் அவர்களுக்கும் சென்னை எத்திராஜ் கல்யாண மண்டபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

தயங்கி நின்றாள். 'மறுபடியும் இங்கே திரும்பி வருவானேன்? லலிதாவையும் அழைத்துக் கொண்டு போய் விட்டால் என்ன?' என்ற எண்ணம் அவள் மனத்தில் தோன்றியது. எனவே, திரும்பச் சவுக்கண்டிக்குள் வருவதற்காக நாலு அடி எடுத்து வைத்தாள். இதற்குள் உள்ளே தமையனும் தங்கையும் பேசியது காதில் விழுந்தது. தன்னைப் பற்றி 'சுத்த அவலட்சணம்' என்று சூரியா கூறியது அவள் உள்ளத்தில் ஆங்காரத்தை உண்டாக்கிற்று. அதற்குப் பதிலாக லலிதா பளீரென்று கன்னத்தில் அறைந்த சத்தமும் அவள் காதில் விழுந்தது. தன்னுடைய உத்தேசத்தை மறுபடியும் மாற்றிக் கொண்டு வீடு நோக்கிச் சென்றாள்.

குளத்தங்கரையி லிருந்து கிட்டாவய்யரின் வீடு குறுக்கு வழியாக அரை பர்லாங்கு தூரம்தான் இருக்கும். அந்த தூரம் போவதற்குள் ஆங்காரம் கொண்ட சீதாவின் உள்ளம் எண்ணாததெல்லாம் எண்ணியது. "இந்தத் தறுதலைப் பையனுக்கு நான் அவலட்சணமாம்! என்னைக் குருடன்தான் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமாம்! அம்பிகே! தாயே! சூரியாவைப் போன்றவர்கள் வெட்கித் தலை குனியும்படியாக உயர்ந்த பதவியில் உள்ள சீமான் என்னைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டானா?" என்று அவளுடைய குழந்தை உள்ளம் ஆத்திரத்துடன் பிரார்த்தனை செய்தது. அன்று காலையிலிருந்து வீட்டில் நடந்து கொண்டிருந்த தடபுடல்களையெல்லாம் பார்த்துவிட்டு, 'இப்படி யெல்லாம் நமக்கு நடக்கப் போகிறதா?' என்று சீதா ஏக்கம் அடைந்திருந்தாள். சூரியா வேடிக்கையாகச் சொன்ன வார்த்தைகள் அவளுடைய உள்ளத் தீயில் எண்ணெய் விட்டது போன்ற பலனை அளித்தன.

அதே சமயத்தில் லலிதா தன்னிடத்தில் எவ்வளவு அபிமானம் கொண்டிருக்கிறாள் என்பதையும் சீதா ஞாபகப்படுத்திக்கொண்டாள். தன்னைப் பற்றித் தமையன் சொன்ன வார்த்தையை பொறுக்காமல் அவன் கன்னத்தில் அறைந்து விட்டாளே? இதுவல்லவா அன்பும் சிநேகமும்? இப்படிப்பட்ட அன்புக்கும் சிநேகத்துக்கும் தன்னால் என்ன பிரதி செய்ய முடியும்? தற்காலத்துக்கு ஒன்றும் செய்ய முடியாது. ஆனால் பிரதி உபகாரம் செய்யக் கூடிய காலம் ஒரு சமயம் வராமலா போகும்?

* * *

சற்று நேரத்துக்கெல்லாம் சுண்டுப் பயல் குளத்தங்கரைப் பங்களாவுக்கு ஓடி வந்தான். "அடி லல்லு! உன்னை அம்மா அழைத்து வரச் சொன்னாள். உனக்குத் தலை வாரிப் பின்னி அலங்காரம் செய்ய ஆரம்பிக்க வேணுமாம். மணி மூன்று ஆகிவிட்டது. இன்னமும் நீ இங்கே உட்கார்ந்திருக்கிறாயே? அண்ணாவுடன் அந்தரங்கம் பேசுவதற்கு இது தானா சமயம்?" என்று கீச்சுக் குரலில் கத்தினான்.

"இந்தப் பிள்ளை பண்ணுகிற அதிகாரத்தைப் பார்!... சுண்டு! சீதா அத்தங்கா அங்கேதான் இருக்கிறாளா? இங்கே வருவதாகச் சொல்லவில்லையா?" என்று கேட்டாள் லலிதா.

"சீதா அத்தங்காதான் உன்னை உடனே புறப்பட்டு வரச் சொன்னாள். இங்கே அவள் வர மாட்டாளாம். ஏன் என்று தெரியவில்லையா? மிஸ்டர் கே. சூரியநாராயண அய்யர்வாள் இங்கே விஜயம் செய்திருப்பதனால்தான்!" என்று சுண்டு சொல்லிவிட்டு, சூரியா தன்னை அடிக்க வந்தால் அவனிடம் அகப்படாமல் தப்பி ஓடுவதற்குத் தயாரானான்.

## 23. இது என்ன ஓசை?

சரஸ்வதி அம்மாளும் சீதாவும் லலிதாவை வீட்டுக்கு வரும்படி சொல்லி அனுப்பியது உண்மைதான். அவள் வந்ததும் அலங்காரம் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். அந்த வேலையில், சீதா மிகவும் உற்சாகம் காட்டினாள். சட்டாம்பிள்ளை உத்தியோகம் பார்த்தாள் என்று சொல்லலாம். இந்த மாதிரி தலை பின்னிச் சடை போட வேண்டும், இப்படி முன் வகிடு எடுக்க வேண்டும், இப்படி முன்னால் இரண்டு சுருட்டை மயிரைத் தொங்கவிட வேண்டும், இந்த வர்ணப் புடவைக்கு இந்த நிற ரவிக்கைப் போட்டுக் கொள்ள வேண்டும், அதே நிறத்தில் தலையில் பூவும் கையில் வளைகளும் இருக்க வேண்டும் — என்றெல்லாம் வாயினால் பிரசங்கம் செய்து கொண்டே சீதா கையினால் காரியமும் செய்து கொண்டிருந்தாள். லலிதாவை அலங்காரம் செய்யும் விஷயத்தில் சீதா காட்டிய தீவிர உற்சாகத்தைக் கண்டு சரஸ்வதி அம்மாளின் கடின இதயம்கூட அவள் விஷயத்தில் சிறிது இளகிவிட்டது.

''அடுத்தாற்போல் சீதாவுக்கும் ஒரு வரனைப் பார்த்து நிச்சயம் செய்துவிட வேண்டும். ஒரே முகூர்த்தத்தில் இரண்டு கலியாணமும் வைத்துக் கொண்டாலும் நல்லதுதான். ஆனால் சாஸ்திரப்படி செய்யலாம் என்கிறார்களோ, என்னமோ? செய்யலாம் என்று சொன்னால் ரொம்ப நல்லது. செலவோடு செலவாய்ப் போய்விடும். ஆனால் அதற்காக முகூர்த்தத்தை ரொம்ப நாள் தள்ளிப் போடக் கூடாது. சித்திரை மாதத்திலாவது கலியாணத்தை நடத்தி விட்டால்தான் எல்லா விஷயங்களுக்கும் சௌகரியமாயிருக்கும்!'' என்று மற்றவர்கள் காதிலும் விழும்படியாகச் சரஸ்வதி அம்மாள் தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்.

''ஏன், அம்மா! என் கலியாணம் நிச்சயமாகிவிட்டமாதிரியே பேசுகிறாயே?'' என்றாள் லலிதா.

''அதிலேகூட சந்தேகமா என்ன!'' என்றாள் சரஸ்வதி அம்மாள்.

''அதுதான் மாமி, நானும் சொல்லுகிறேன்! மதராஸிலிருந்து வருகிறவர்கள் வெறுமனே ஜம்பத்துக்காக வருவார்களா? அல்லது நம்ம லலிதாவைப் பார்த்துவிட்டு யாராவது 'பிடிக்கவில்லை' என்றுதான் சொல்வார்களா? அப்படிச் சொல்கிறவர்களுக்குத் தலையிலே கொம்பா முளைத்திருக்கும்? லலிதா மாதிரி பெண் கிடைப்பதற்குப் பூர்வ ஜன்மத்திலே புண்ணியம் செய்திருக்க வேண்டாமா!'' என்று சீதா கூறியது சரஸ்வதி அம்மாளைப் பூரிக்கச் செய்தது.

''வருகிறவர்கள் சொல்லுகிறது இருக்கட்டும். நான் 'மாப்பிள்ளை பிடிக்கவில்லை' என்று சொல்லி விட்டால்?'' என்றாள் லலிதா.

''அசடே! பேசாமலிரு, யார் காதிலாவது விழப் போகிறது! சூரியா பேத்துகிறதைக் கேட்டுக் கொண்டு ஏதாவது உளறாதே!'' என்று சரஸ்வதி அம்மாள் கோபமாய்ச் சொன்னாள்.

''நானும் அதுதான் இவளுக்குச் சொல்லிக் கொண்டிருக்கிறேன், மாமி! பார்க்கிறதுக்கு முன்னாலேயே 'பிடிக்காமலிருக்கும்' என்று எதற்காக நினைத்துக் கொள்ள வேண்டும்! மாமாவோ நேரில் பார்த்துவிட்டு வந்து 'மாப்பிள்ளை மன்மதன் மாதிரி இருக்கிறார்!' என்று சொல்லுகிறார். மன்மதனைவிட அழகாய் எங்கே போய் மாப்பிள்ளை பிடிக்கிறது, மாமி! இந்த விஷயத்திலே மட்டும் லலிதா கொஞ்சம் அசட்டுப் பிசட்டு என்று பேசிக் கொண்டிருக்கிறாள். அது எனக்குப் பிடிக்கவே இல்லை. இவள் அண்ணாவின் துர்ப்போதனைதான் காரணம் போலிருக்கிறது!'' என்றாள் சீதா.

''கேட்டாயா, லலிதா! உன் அத்தங்காள் சொல்கிறதைக் கேட்டுக் கொள். சூரியா ஏதாவது உளறினால் அதைக் காதிலேயே போட்டுக் கொள்ளாதே! அவனுக்கு இந்த விஷயம் எல்லாம் என்ன தெரியும்! யாரோ அவனுக்குத் தூபம் போட்டு விட்டிருக்கிறார்கள்! சீதாதான் நல்ல மாதிரி யோசனை சொல்கிறாள். அவளுடைய புத்திமதியைக் கேட்டுக் கொள்!'' என்றாள் சரஸ்வதி அம்மாள்.

* * *

லலிதாவை அலங்காரம் செய்ய ஆரம்பித்த சிறிது நேரத்துக்கெல்லாம் பம்பாய் ராஜம்மாள் சூரியாவைக் கூப்பிட்டு அனுப்பி, ''அப்பா! நான் பிறந்து வளர்ந்த ஊரைச் சுற்றிப் பார்க்க வேணுமென்று ஆசையாயிருக்கிறது. குளத்தங்கரையில் அண்ணா பங்களாக் கட்டியிருக்கிறானாமே! அங்கே போய்ச் சற்று நேரம் காற்று வாங்கி விட்டு வரலாமா?'' என்றாள்.

''ஆகட்டும் அத்தை, போகலாம்'' என்றான் சூரியா.

இருவரும் பங்களாவை அடைந்தார்கள். ராஜம்மாள் பங்களாவின் திறந்த ஜன்னல் வழியாக நெடு நேரம் குளத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். ''எனக்குக் குளத்தில் இறங்கிக் குளிப்பதற்கு ரொம்பப் பிரியம். விவரம் தெரிந்த நாளிலிருந்து கலியாணம் ஆகும் வரையில் ஒரு நாள் கூட இந்தக் குளத்தில் குளிக்காமல் இருந்தது கிடையாது. பம்பாய்க்குப் போனதிலிருந்து 'குழாய் ஜலந்தான் கங்கை, காவேரி' எல்லாம் ஆகிவிட்டது'' என்று சொல்லி ராஜம் பெருமூச்சு விட்டாள்.

''அத்தை! உங்களுக்கு நீந்தத் தெரியுமாமே? அது உண்மையா? பெரிய அத்தை சொன்னாள்'' என்றான் சூரிய நாராயணன்.

''உண்மைதான், சூரியா! அப்பா எனக்கு நீந்தக் கற்றுக் கொடுத்தார். நான் குழந்தையாயிருந்தபோது ஒரு நாள் யாரோ ஒரு ஸ்திரீ காவேரி வெள்ளத்தில் போய்விட்டாள் என்று செய்தி வந்தது. அது முதல் 'பெண்களுக்குக் கட்டாயம் நீந்தத் தெரிய வேண்டும்' என்று சொல்லி அப்பா, அதாவது உன் தாத்தா எனக்கு நீந்தக் கற்றுக் கொடுத்தார். இந்தக் குளத்தின் இக்கரையிலிருந்து அக்கரைக்கு நீந்திப் போய்விடுவேன். சில சமயம் காவேரியில்கூட நீந்தியிருக்கிறேன். புண்ணிய காலங்


தமிழ்ப் புத்தாண்டு முதல்
வெளிவருகிறது.
குழந்தைகள்
மாதமிருமுறை
கோகுலம்
உங்கள் பிரதிக்கு இன்றே
பதிவு செய்து கொள்ளுங்கள்
கோகுலம்

# அந்த நாள் ஒய்யாரம் குடும்பத்துக்கு கொண்டு தந்தது எதுவோ?




## அதுவோ பினகா!
## அதன் புதிய ஸாண்டல்வுட் டால்க்மூலம்



பினகா, சந்தனத்தின் சாறெடுத்து,
சத்தெடுத்து, சருமப் பராமரிப்பு
சாதனம் கலந்தெடுத்து படைத்துள்ளது.
கழல் வண்ணப் பெட்டியினில் அடைத்து
அளித்துள்ளது. அந்தநாள் ஒய்யாரத்
தன்னில், குடும்பத்தினரைக் கொலுவேற்ற,
சந்தன மயமான புதிய பாதை—இன்றே
ஒரு புதிய பினகா ஸாண்டல் வுட்
டால்க் டின் வாங்கி அளிப்பீர்.

நாட்டம் அவர்க்கு சந்தனத்தில்
இல்லை எனில், நாடிப் பெறுவீர்
பினகா ரோஸ் டால்க்

**பினகா**

டால்க்—குடும்பம் முழுக்க விரும்பும்

ULKA CTP-34 Tam

CIBA Cosmetics

களிலும் பண்டிகை தினங்களிலும் வண்டி கட்டிக் கொண்டு எல்லோரும் காவேரிக்குக் குளிக்கப் போவோம். அப்பா, அண்ணு, அக்கா எல்லோரு மாகப் போவோம். நான்தான் வீட்டுக் குக் கடைக் குட்டிப் பெண். எல்லாருக் கும் என் பேரில் ஆசை அதிகம்....''

ராஜம்மாள் கண்ணைத் துடைத்துக் கொண்டு, '' அந்தப் பழங்கதையெல் லாம் இப்போது எதற்கு? என்னமோ உளறினேன். இருக்கட்டும், சூரியா! நீ இந்த வருஷம் மெட்ரிகுலேஷன் பரீட் சைக்குப் படிக்கிறயாமே? அப்படித் தானு?'' என்றள்.

ராஜம்மாளின் கண்ணில் கண்ணீர் ததும்புவதைப் பார்த்துச் சூரியாவும் பேச்சை மாற்ற விரும்பினன்.

''ஆமாம், அத்தை! முன்னேயெல் லாம் மெட்ரிகுலேஷன் என்பார்கள். இப்போது எஸ். எஸ். எல். சி. என்று அதற்குப் பெயர். எங்க அம்மாவுக்குப் பதினெண்ணு வது என்று சொன்னல் தான் தெரியும்!'' என்றன்.

''ஆமாம், சூரியா! நீ ஒரு வக்கீல் வீட்டில் ஜாகை வைத்துக் கொண்டிருக் கிறயாம். அந்த வக்கீலுக்கு ஒரு பிள்ளை இருக்கிறனம்; பி. ஏ. படிக் கிறனமே? — வாஸ்தவந்தானு?'' என்று ராஜம்மாள் கேட்டாள்.

''வாஸ்தவந்தான் அத்தை! அதற்கு என்ன இப்போது?'' என்று சூரியா கேட்டபோதே அவன் மனத்தில் அந்தக் கேள்விக்குப் பதிலும் உதித்தது. வக்கீ லின் பிள்ளைக்குச் சீதாவைக் கொடுக்க லாம் என்பதற்குத்தான் அத்தை அவனைப் பற்றிக் கேட்கிறள் என்று தெரிந்து விட்டது. அந்த எண்ணம் ஊசியால் குத்துவது போல் சுரீர் என்ற வேதனையை உண்டாக்கியது.

''சூரியா! உன் அத்திம்பேர் ஒரு மாதிரி மனுஷர் என்று கேட்டிருப்பாய். எனக்கோ உடம்பு சரியாகவே இல்லை. இந்தப் பெண் சீதாவுக்கு ஒரு கல் யாணத்தைச் செய்து வைத்துவிட வேண்டுமென்று கவலையாயிருக்கிறது. அண்ணுவிடம் சொல்லித்தான் இருக் கிறேன். ஆனல் அவனுக்கு எத்தனையோ ஜோலி. யாராவது நல்ல வரனைகத் தெரிந்தால் பார்த்துச் சொல், சூரியா! அதற்காகத்தான் முக்கியமாக உன் னிடம் தனியாகப் பேச வேண்டும் என்று சொன்னேன்.''

''அத்தை! இது என்ன பிரமாதம்? சீதாவின் சமர்த்துக்கும் அழகுக்கும் வரன்கள் நான், நீ என்று போட்டி போட்டுக் கொண்டு வரமாட்டார்களா? அதைப் பற்றி உங்களுக்குக் கவலையே வேண்டாம்!'' என்று சூரியா கூறினன்.



''அடச் சீ! அறுபது வயசுக்கு மேலே பாவாடை தாவணி என்ன?''

''என்னுடைய கட்டம் போட்ட ஒன்பது கெஜம் புடவையைக் கிழித்து, நம்ம நாலு பேத்திகளும் லுங்கி கட்டிண்டு சினிமா பார்க்கப் போய் விட்டதுகள்! பதிலுக்கு நான் இதை...''

அதே சமயத்தில் தன்னுடைய மனத்துக் குள், ''நான் ஒருவன் இருக்கிறேனே? வேறு வரனைத் தேடுவானேன்?'' என்று சொல்லிக் கொண்டான். இதை வெளிப் படையாக அத்தையிடம் சொல்லிவிட லாமா என்றுகூட மனத்தில் நினைத் தான். ஆனல் சங்கோசம்குறுக்கிட்டது.

''சீதா சமர்த்து என்று உனக்குத் தோன்றுகிறதா, சூரியா! எதிலிருந்து அவ்வாறு சொல்கிறய்? வயது பதினறு பிறந்திருக்கிறது; இன்னும் விளையாட் டுத்தனம் கொஞ்சம்கூடப் போகவில்லை. ஓடையில் விழுந்ததும், 'ஓகோ' என்று கூச்சல் போட்டாளே, பார்த்தாயல் லவா?'' என்றள் ராஜம்மாள்.

''அதனல் என்ன, அத்தை! சிறு பிராயத்தில் பெண்கள் அப்படிச் சிரித்து விளையாடிக் கொண்டிருந்தால் தானே நன்றயிருக்கிறது? அழுமூஞ்சியாயிருந் தால் யாருக்குப் பிடிக்கும்? பம்பாய்க் குப் போய் வந்த பிறகு லலிதாவின் சுபாவம்கூட மாறியிருக்கிறது. அதற்கு முன்னலெல்லாம் அம்மாவுடன்சண்டை பிடிப்பதும் அழுவதுமாகவே இருப் பாள். கலகலப்பாக இருக்கமாட்டாள். இந்த ஒரு வருஷமாகச் சிரித்து விளை யாடிக் கொண்டு சந்தோஷமாயிருக் கிறள்!'' என்றன் சூரியா.

''இந்த அசட்டுப் பெண் உன் தங்கை யையும் தன்னைப் போல் ஓயாமல் சிரித் துக் கொண்டிருக்கும்படி செய்துவிட்டா ளாக்கும்.''

''அடிக்கடி சீதாவை 'அசடு' 'அசடு' என்று சொல்கிறீர்களே, அத்தை! அவள் முகத்திலேயே 'சமர்த்து' என்று எழுதி ஒட்டியிருக்கிறதே! எது வரையில் படித்திருக்கிறள்?''

'' படிக்கிறதிலே சீதா சமர்த்துத் தான், சூரியா! பள்ளிக்கூடத்தில் எப் போதும் முதல் மார்க்குத்தான். ஒரு தடவை காதால் கேட்ட பாட்டை அப்படியே பாடிவிடுவாள்! இந்தப் பக்கங்களில் எட்டாவது என்று சொல் கிறர்களே. அது வரையில் படித்திருக் கிறள். இங்கிலீஷ் நன்றகத் தெரியும்.

கதை சொல்லச் சொன்னால் இன்றைக்கெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கலாம். ஆனால் உலகந் தெரியாத பெண்ணாயிருக்கிறாள்! யாரிடம் எப்படி நடந்து கொள்வது என்று தெரியவில்லை. இந்த வருஷம் லலிதாவின் கல்யாணத்தோடு சேர்த்துச் சீதாவுக்கும் நடத்தி விட்டால் என் மனத்துக்கு நிம்மதியா யிருக்கும்.''

மேற்படி சம்பாஷணையின் நடுவில் சூரியாவுக்கு ஓர் எண்ணம் தோன்றியது. அதாவது அத்தைக்குச் சீதாவைத் தனக்குக் கொடுக்க வேண்டும் என்ற விருப்பம் போலிருக்கிறது; அதை மனத்தில் வைத்துக் கொண்டுதான் வரனைப் பற்றிய பேச்சை எடுத்திருக்கிறாள் என்று நினைத்தான். ஆனாலும் தன்னுடைய கௌரவத்தை விட்டுக் கொடுத்துவிடக் கூடாது என்று எண்ணினான். அத்தை அந்த விஷயத்தைப் பற்றிப் பட்டவர்த்தனமாகக் கேட்ட பிறகு கொஞ்சம் 'பிகு' பண்ணிக் கொண்டு அரை மனதாகத் தன்னுடைய சம்மதத்தைத் தெரியப் படுத்துவது என்று தீர்மானித்தான்.

எனவே, சிறிது அலட்சிய பாவத்துடன், ''இங்கே என்ன அப்படி ஓசத்தியான வரன் கிடைத்துவிடப் போகிறது. அத்தை! பம்பாயில் இல்லாத வரனா? அங்கேயே பார்க்கக் கூடாதா?'' என்றான்.

''பம்பாயில் வரன் இருக்கலாம். சூரியா! ஆனால் சீதாவை இந்தப் பக்கத்தில் கொடுக்க வேண்டும் என்பது என் எண்ணம், நம்முடைய குடும்பத்தில் நான் ஒருத்தி பம்பாயில் வாழ்க்கைப்பட்டது போதும் என்று இருக்கிறது. மறுபடியும் நீ தேவபட்டணத்துக்குத் திரும்பிப் போனதும் அந்த வக்கீலாத்துப் பையனின் ஜாதகம் வாங்கி அனுப்புகிறாயா, சூரியா? அந்தப் பையன் பெயர் என்ன?''

''அவன் பெயர் பட்டாபிராமன், அத்தை! பையன் கெட்டிக்காரன்தான்; பி. ஏ. படிக்கிறான். ஆனால் சொத்து அதிகம் கிடையாது. ஒரு வீடு இருக்கிறது; அதன் பேரில் கடன். இந்த இலட்சணத்துக்கு ஏராளமான வரதட்சிணை வரவேண்டும் என்று அவன் அப்பாவும் அம்மாவும் ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். பட்டாபியை விடச் சிலாக்கியமான வரன்கள் இருக்கின்றன. நான் பார்த்துச் சொல்கிறேன். நீங்கள் அவசரப்பட வேண்டாம்'' என்றான் சூரியா.

''எவ்வளவோ பெரிய வரன்கள் இருக்கலாம்! ஆனால் நமக்குச் சரியாக வரவேண்டாமா, சூரியா? இந்த நாளில் பிள்ளைகளைப் பெற்றவர்கள் எல்லாரும் கண்ணை மூடிக் கொண்டுதான் வரதட்சிணை கேட்கிறார்கள். நாளைக்கு உனக்குத்தான் கல்யாணப் பேச்சு வருகிறது என்று வைத்துக் கொள்வோம். அண்ணாவும் மன்னியும் பத்தாயிரம் ரூபாய்க்குக் குறைந்து வரதட்சிணை வாங்குவார்களா?''

வரதட்சிணை வாங்குவதைப் பற்றி ஒரு பெரிய கண்டனப் பிரசங்கம் செய்ய வேண்டுமென்று சூரியா எண்ணினான். கல்யாண விஷயத்தில் தன்னுடைய தீர்மானமான கொள்கையை வெளியிடவும் உத்தேசித்தான். ஆனால் அதற்குள் அத்தையின் முகபாவம் மாறுவதைக் கவனித்தான். ராஜம்மாளின் முகத்தில் பீதியின் அறிகுறி தோன்றியது. ''சூரியா! இது என்ன ஓசை?'' என்று கேட்டாள்.

''ஓசையா? என்ன ஓசை? எனக்கு ஓசை ஒன்றும் கேட்கவில்லையே!'' என்றான் சூரியா.

''கவனித்துக் கேள், சூரியா! சமுத்திரத்தின் அலை ஓசை மாதிரி சத்தம் கேட்கவில்லையா?''

சூரியாவின் காதிலும் அப்போது அந்த ஓசை கேட்டது. பங்களாவுக்கு வெளியில் எட்டிப் பார்த்தான். சற்றுத் தூரத்தில் ஒரு விஸ்தாரமான சவுக்கு மரத் தோப்புக் காணப்பட்டது. இள வேனிற்காலத்தின் இனிய தென்றல் அந்தத் தோப்பில் பிரவேசித்து நெருங்கிய சவுக்கு மரக் கிளைகளின் வழியாக நுழைந்து சென்றபோது உண்டான சத்தந்தான் அப்படிச் சமுத்திரத்தின் அலைஓசை போன்ற பிரமையை உண்டாக்கியது.

இதைத் தெரிந்து கொண்ட சூரியா' ''அத்தை! அலையும் இல்லை; ஓசையும் இல்லை! அதோ அந்தச் சவுக்குத் தோப்பின் கிளைகள் காற்றில் அசைவதுதான் அலை ஓசை போன்ற சத்தத்தை உண்டாக்குகிறது!'' என்றான்.

அது உண்மையென்று தெரிந்து கொண்ட பிற்பாடு ராஜம்மாளின் முகம் சிறிது தெளிவடைந்தது.

''இருந்தாலும், அத்தை! நீ என்னத்துக்காக அவ்வளவு பயமடைந்தாய்? அலை ஓசையாயிருந்தால்தான் என்ன?'' என்று சூரியா கேட்டான்.

''என் மனது இப்போது ரொம்பவும் கலங்கிப் போயிருக்கிறது. இன்னொரு சமயம் சொல்லுகிறேன்!'' என்றாள் ராஜம்மாள்.

சற்றுத் தூரத்திலிருந்து, 'பாம், பாம்' என்று மோட்டார்க் கொம்பின் சத்தம் கேட்டது. (தொடரும்)

# FANATICS!

**பீகன்** விசிறியை ஒருமுறை உபயோகித்த பின் வேறெந்த விசிறியைப் பற்றி நினைக்கக்கூட மாட்டீர்கள்



அழகிலும், திறனிலும் இணையற்ற பீகன் விசிறியின் சிறப்பு அம்சங்களை பாருங்கள்:

- புதிய, அழகான, சீரான உருவம்
- உச்ச வேகத்திலும், ஓசையின்றி, தடையில்லாத ஓட்டம்
- அதிக பட்ச காற்று வீச்சு தரும் அமைப்பு
- நேர்த்தியான பிளாஸ்டிக் ரெகுலேடர்
- குறைந்த மின் செலவு
- ஒரு ஆண்டு உத்திரவாதம்; தேவைப்படும் போது விற்பனைக்குப்பின் சேவை
- 1200 மிமீ (48") அளவில் கிடைக்கிறது; விரைவிலேயே, 900 மிமீ (36"), தவிர மற்ற அளவுகளிலும் கிடைக்கும்.

"அற்புதம்" எனக்கூறுவீர்கள் நீங்கள்: அதை நாங்கள் "பீகன்" என அழைக்கிறோம்.



உங்கள் நம்பிக்கைக்குரிய சின்னம்

**பெஸ்ட் & கம்பெனி பிரைவேட் லிட்.**

13/15, வடக்கு பீச் ரோடு, சென்னை-1.

தமிழ்நாட்டில் கிளைகள்: கோயம்புத்தூர், திருச்சி.



FOCUS.BC.424(b)TAM

# குழந்தைப் புத்தகங்கள்

அரசர் பவனி வந்தார். அவரது அலங்கார ஆடைகளையும் தலைப்பாகையையும் கண்டது ஓர் எலி. 'அவரைப் போல் சட்டையும் தலைப்பாகையும் காலணியும் அணிந்தால் நானும்தான் கம்பீரமாக இருப்பேன்' என்று அது எண்ணியது. அது மட்டுமா? நகரத்து வியாபாரிகளையெல்லாம் மிரட்டி ஆடையணி வாங்கி அணிந்து 'அலங்கரித்துக் கொண்டு அரச சபைக்குப் போய் ராஜாவையே விரட்டியது. 'சிங்காதனத்தை எனக்கு ஒழித்துவிடு. இல்லாவிட்டால், பெரிய எலி, சின்ன எலி, அப்பா எலி, அம்மா எலி, தாத்தா எலி, வாலிப எலிகளையெல்லாம் அழைத்து வந்து உன் ராஜ்யத்தை முற்றுகை யிடச் செய்வேன்' என்றது. அரசர் சிரித்துக் கொண்டே "பேசாமல் உன் பொந்து உலகத்துக்குப் போ!" என்று புத்தி சொன்னார். ஆனால் எலி ராஜா அதைக் கேட்கவில்லை. அப்படியானால் என்ன நடந்தது?

கதையைப் படிக்கும்போது முடிவு தன்னால் தெரிந்து விட்டுப் போகிறது. அது இருக்கட்டும். எத்தனை ருசிகரமான கதை! எவ்வளவு முக்கியமான விஷயத்தைக் குழந்தைகளுக்குக் கதை ரூபத்தில் அழகாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது?

இப்படி இனிக்கும் கதைகளைப் பதினாறே பக்கங்களில் கண்ணைப் பறிக்கும் வண்ண வண்ணப் படங்களுடன் கைக்கு அடக்கமான சின்னஞ் சிறிய புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள், பம்பாயைச் சேர்ந்த ரத்ன பாரதி நிறுவனத்தார். இவர்களுடைய நூல்கள் நம் நாட்டுக் கலாசாரத்துக்கு ஏற்றதாகவும் அமைப்பிலும் தயாரிப்பிலும் அச்சிட்டுள்ள முறையிலும், மேல் நாட்டுக் குழந்தைப் புத்தகங்களுக்கு இணையானதாகவும் உள்ளன.

என்ன அழகான சித்திரங்கள், எத்தனைவிதமான வர்ணங்கள். கதையைப் படிக்குமுன் சித்திரங்களே கதையைச் சொல்லிவிடுகின்றன. நான்கு நாடோடிக் கதைகளுக்கான நான்கு புத்தகங்களிலும் சித்திரங்கள் கேலியாக வரையப்பட்டிருந்தாலும் அவை புதிய பாணியில் குழந்தைகளின் உள்ளத்தில் ஒட்டுப்படமாகப் பதியும் வகையில் அழகுற அமைந்திருக்கின்றன.

ஐந்திலிருந்து எட்டு வயது வரையில் உள்ள பாலர்களுக்காக ஆறு புத்தகங்களும் ஏழிலிருந்து பத்து வயதுக் குழந்தைகளுக்கான இரண்டு புத்தகங்களும் பிராணிகள் உலகத்தைப் பற்றி அவைகளின் வாழ்க்கை முறை, வளர்ப்பு, உபயோகம், பழக்க வழக்கம் இவைகளை விளக்குவதாக மொத்தம் எட்டு புத்தகங்களும் இதே நிறுவனம் வெளியிட்டிருக்கிறது. எளிமையான நடையில், குழந்தைகள் தாங்களே சிரமமின்றிப் படித்து அறிந்து கொள்ளும் வகையில் தேவையான தகவல்களை முறைப்படி கொடுத்திருக்கிறது.

குழந்தைகள் இந்தப் புத்தகங்களைப் புதையலைப் போல் போற்றிப் பாதுகாப்பார்கள் என்பது நிச்சயம்.

'இந்திய நதிகள்' என்ற வரிசையில் பதின்மூன்றிலிருந்து பத்தொன்பது வயது வரையுள்ளவர்களுக்கென்று இரண்டு அற்புதமான புத்தகங்களைத் தயாரித்திருக்கிறார்கள். கங்கை, யமுனை என்பதே அவ்விரண்டு புத்தகங்களும்.

'நான்தான் கங்கை... நான்தான் யமுனை" என்று கங்கையும், யமுனையும் தாங்கள் பிறந்து வளர்ந்து ஆடி ஓடிக் கடலடையும் கதைகளைத் தாம் எத்தனை அழகாகச் சொல்லுகின்றன? இவ்விரு நதிகளின் கரையிலும் செழித்த நாகரிகங்கள், எழுந்து அழிந்த சாம்ராஜ்யங்கள், வளர்ந்த நகரங்கள், வாழும் மக்கள், தோன்றிய அறிஞர்கள், பெரியோர்கள், — சமயங்கள், காலத்தை வென்று நிற்கும் கட்டடங்கள் என்று கதை கதையாக, படிக்க ஆரம்பித்தால் பாதியில் கீழே வைக்க மனம் வராதபடி அத்தனை விறுவிறுப்பும் வேகமுமாக, எழுதப்பட்டுள்ள குழந்தை இலக்கியங்கள் இவை. அவைகளுக்கு ஏற்ற அற்புத ஓவியங்களும் இடம் பெற்றுள்ளன.

ரத்ன பாரதி நிறுவனத்தினர் 1942 — முதலே அறிவு நூல்களைச் சேகரிக்கலானார்கள். ஏராளமான புத்தகங்கள் புகைப்படங்களோடு ஒரு நூலகம் உருவாயிற்று. ஆராய்ச்சி செய்யும் அறிவாளிகள், எழுத்தாளர்கள், சித்திரக்காரர்களைக் கொண்டதொரு குழு அமைக்கப்பட்டது. ஏராளமான தகவல்களிலிருந்தும் ஆராய்ச்சி நூல்களிலிருந்தும் தரமான கையெழுத்துப் பிரதிகள் தயாரிக்கப்படுகின்றன. இந்த நிலையில் இதைப் பெற்றோர், குழந்தைகள், பள்ளி ஆசிரியர்கள் ஆகியோரின் பார்வைக்கு அனுப்பி அவர்களின் அபிப்பிராயங்களை அறிகிறார்கள். அதன்படி தக்க மாற்றங்கள் மேற்கொள்ளப்படுகின்றன. பிறகுதான் புத்தகம் அச்சுக்குப் போகிறது.

இப்படி ஒவ்வொரு நிலையிலும் அதன் தரத்தை உயர்த்தப் பாடுபடுவதினால்தான் ரத்ன பாரதிப் புத்தகங்கள் ரத்தினங்களாக அமைந்திருக்கின்றன.

இந்தப் புத்தகங்களை இப்போது ஆங்கிலத்தில்தான் வெளியிட்டிருக்கிறார்கள். ஆனால் எல்லா இந்திய மொழிகளிலும் இவைகளை வெளியிடும் திட்டமும் இவர்களுக்கு உண்டாம். மேற்கூறிய புத்தகங்களுக்கு விலை விவரப் பட்டியல் கேட்டால் கிடைக்குமிடம் :

**Ratnabharati, Ilaco House, Sir Pherozeshah Mehta Road, Bombay - 1.**

# சைக்கோ ஸாரநாதன்

## 6. தாற்காலிக விடுதலை!

கி.ராஜேந்திரன்

அனசூயாவின் விரல்கள் பம்பரக் கயிற்றின் மீதாக விளையாடியதானது—அமிர்தலிங்கத்தின் எண்ணங்களைப் பின்நோக்கிக் கொண்டு சென்றது. ஏறக்குறைய இதேபோன்ற ஒரு கயிறுதான் அன்று அவன் கரத்திலும் விளையாடியது. ஆனால் டாக்டர் குஹாவுக்கு அது விளையாகவல்லவோ முடிந்தது!

வழக்கம்போல்தான் அன்றும் அவன் டாக்டர் குஹா வாங்கிக் கொடுத்த பைஜாமா ஜிப்பாவை அணிந்து அவருடைய மனநோய் மருத்துவ மனைக்கு வந்தான். சாதாரண உடையில் போலீஸார் இருவர் காவலாக அவன் பின்னோடு சதா இருந்தனர். போதாததற்கு அவர்களில் ஒருவன் கைத் துப்பாக்கி ஒன்றை மறைவாக வைத்துக்கொண்டிருந்தான். முன் தடவைகளைப் போலவே இன்றும் வாசல் அறையில் இருந்த ரிஸப்ஷனிஸ்ட் அழகி அவர்களைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தாள். அமரச் சொல்லி விட்டு 'ரீடர்ஸ் டைஜஸ்ட்' பத்திரிகையில் ஆழ்ந்தாள். அந்த வரவேற்பு அறையில் இரு போலீஸாருக்கும் மத்தியில்தான் அவன் உட்கார்ந்து காத்திருந்தான். டாக்டருடன் இருந்த ஒரு நோயாளி வெளிவந்ததும் ரிஸப்ஷனிஸ்ட் அந்த நோயாளியிடம் பணம் வாங்குவதில் கருத்துச் செலுத்தியபடியே ஸாரநாதனுக்கு ஜாடை காட்டினாள். உள்ளே செல்ல இவ்விதம் அனுமதி கிடைத்ததும் வழக்கம் போலவே போலீஸார் இருந்த இடத்திலேயே இருக்க, ஸாரநாதன் மட்டும் டாக்டரின் தனி அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்தினான். வழக்கத்திலிருந்து மாறுபட்டு எதுவும் நடந்துவிடவில்லை — ஒரே ஒரு விஷயம் தவிர!

ஸாரநாதன் சென்ற தடவை டாக்டரைப் பார்க்க வந்தபோது தெருவில் ஒரு 'ஸேஃப்டி பின்'னைக் கண்டெடுத்தான். அதை அவன் தன் சட்டையில் குத்திக் கொள்வதைப் போலீஸாரும் பார்த்தார்கள். ஆனால் ஒன்றும் சொல்லவில்லை. 'கிறுக்கு! தரையில் கிடக்கும் அற்பப் பொருளைக் கூடப் பொறுக்கிக் கொள்கிறது' என்று நினைத்தார்களோ, அல்லது 'ஒரு ஸேஃப்டி பின்னால் என்ன துன்பத்தை யாருக்கு





இவன் விளைவித்துவிடப் போகிறான்?' என்று அலட்சியப்படுத்தினார்களோ, தெரியாது. ஆட்சேபிக்கவில்லை. ஆனால் இம்முறை டாக்டரை ஸாரநாதன் பார்க்க வந்தபோது அவன் அணிந்திருந்த பைஜாமா நழுவாமல் இடுப்பில் நிற்க உதவியது அந்த ஸேஃப்டி பின்தான்! பைஜாமாவில் இருந்த கனமான நாடா தனியே உருவி எடுக்கப்பட்டு அவனால் நன்கு முறுக்கேற்றப்பட்டுத் தடிமனான ஒரு கயிறாக உருமாறி இடுப்பில் இலேசாகச் சுற்றிக் கட்டப்பட்டிருந்தது. அந்தச் சுருக்கு முடியை ஸாரநாதன் கரத்தின் ஒரு நொடிப்பிலே அவிழ்த்துவிட முடியும். அடுத்துக் கையின் ஒரு வீச்சிலே அந்தக் கயிறு அவன் விரல்களினூடே நெளிய முடியும். மூன்றாவது விநாடியில் அது ஒரு கழுத்தைச் சுற்றி வளைத்து இறுக முடியும்!

சிறைச்சாலையில் கழிந்த நாட்களில் ஸாரநாதனின் பலவீனமான மனத்தினுள்ளே மறுபடியும் கொலை வெறி படிப்படியாக அதிகரித்துக் குமுறிக் குமைந்து அவனைத் திணற அடித்துக் கொண்டிருந்தது. அதற்கு இன்று விடுதலை கிடைக்கப்போகிறது என்று நினைக்கும்போதே அவன் மனம் ஓரளவு இலேசாகிவிட்டது. நேற்றுவரையில் மன உளைச்சல் காரணமாக அவன் கைகள் பரபரத்துக் கொண்டிருந்தன; உடல் முறுக்கேறி இருந்தது. இப்போது உடல் தளர்ந்தது — இதோ உணர்ச்சிக் குவியல் சரிய ஒரு வாய்ப்பு ஏற்படப் போகிறது என்ற எண்ணத்தில். அப்பா! கொந்தளிப்பு அடங்கப் போகிறது என்று எதிர்பார்க்கும்போதே இத்தனை நிம்மதி பெற முடியும் என்றால் அந்தச் சந்தர்ப்பம் சரியான விதமாகப் பயன்படுத்தப்பட்டு அணை உடைந்து வெள்ளம் வெளியேறிவிட்டால் எத்தனை சாந்தி கிடைக்கும்! அந்த ஒரு தவிப்பு மிக்க இன்பத்தை அநுபவிக்க அவன் அவசரப்பட்டான்.

டாக்டர் கேட்டுக் கொள்வதற்கு முன்பாகவே அவன் சாய்மானப் படுக்கையில் உடலை நீட்டிக் கண்களை மூடினான். ஜிப்பாவின் ஒரு கையை உயர்த்தி ஊசி போடும் இடத்தை அம்மணமாக்கினான். ஊசி பட்டதுமே ஒலியைப்



பீச்சும் கிராமஃபோன் ரிகார்டு போல் இவனும் சுருக்கென ஊசி துளைத்ததும் மளமளவென்று பேசத் தொடங்கி விட்டான்.

வழக்கத்தை விட அவன் வெகு உற்சாகமாகக் காணப்பட்டது டாக்டர் குஹாவுக்கு ஆச்சர்யம் அளித்தது. சாதாரணமாக அவனைப் பேச வைப்பது என்பது அவ்வளவு சுலபமாய் இராது. பேசினாலும் தடங்கல்கள் இடர்ப்பாடுகள் இன்றி வார்த்தைகள் வளர்ந்ததில்லை. தயக்கம், முட்டுக் கட்டை, திணறல்! சோடா பாட்டிலினுள் அமுக்கி வைக்கப்பட்ட வாயுவாக எண்ணங்கள் தேங்கும். இன்று மூடி திறக்கப்பட்டதுபோல் நினைவுகள் கொப்பளித்தன. தமது சிகிச்சைமுறை பலன் அளிக்கத் தொடங்கி விட்டதென அவர் இறுமாந்து போனார்.

டாக்டர் குஹா மேஜையருகே போய்க் காகித 'பேடு'ம் பென்சிலும் எடுத்து வந்து அவன் அருகே இருந்த வசதி மிக்க நாற்காலியில் அமரும்வரைகூட அவன் காத்திருக்கவில்லை. பல காட்சிகளை விவரிக்க ஆரம்பித்து விட்டான்.

திடுமென்று அவருக்கு அவன் உள்ளம் வெட்ட வெளிச்சமாகி விட்டது போல் தோன்றியது. அதன் ஏக்கங்களையும் விரக்திகளையும் புரிந்து கொள்வது சாத்தியம்தான் எனப் பட்டது. அம்



மனத்தின் ஆசைகளும் அடிமைத்தனங்களும் எதையோ பற்றிக்கொள்ள முயன்ற அதன் வீரமும், அந்த எதுவோ வழுக்கி விட்டு விடவே தடுமாறிய மனத்தின் அவல நிலையும் அவருக்கு அர்த்தமாயின.

தம்மிடம் சிகிச்சைக்கு வந்துள்ள இந்த நோயாளியிடம் அவருக்குப் பச்சாத்தாபம் பொங்கியது. அதே சமயம் வெற்றிக் களிப்பிலும் அவர் ஆழ்ந்து போனார். தகர்க்க முடியாதது என நேற்றுவரை அவர் கருதிய மனக் கோட்டை இன்று தனது வாசல் கதவுகளை அகலத் திறந்து வைத்துக்கொண்டு அவரை வரவேற்றது. இவ்விதம் அது சரணடைந்து விட்டபிறகு உள்ளே சென்று ஆராய்வதும் அதனைத் திறம்பட ஆள்வதும் எளிதேயல்லவா?

அவன் உள்ளத்தினுள்ளே புழுதி படிந்து அழுக்கேறி அழுத்திக்கொண்டிருந்த பல காட்சிகள் இன்று துடைக்கப்பெற்றுப் பளிச் பளிச்சென்று ஒன்றன் பின் ஒன்றாய் அவர் கண்ணெதிரே விரிந்தன. குறிப்பெடுத்துக் கொள்ளக்கூட மறந்து டாக்டர் குஹா அவற்றைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

**காட்சி 1:** சிறுவன் தாயைக் கொஞ்சுகிறான். வாரி அணைத்திருக்கும் அவள் முத்த மழை பொழியத் தயாராகிறாள். அவன் சிரம் அவள் கழுத்தில் ஒண்டிக் கொண்டிருக்கிறது. அந்தக் கழுத்து...! அது பளிங்கு — அன்னம் — பால் — சங்கு! இவையெல்லாம் பொருந்தும்; எதுவுமே பொருந்தாது! உறுதியானதுதான். ஆனால் ரத்த நாளங்கள் பசுமையாக ஓடுவது தெரியும்! ராஜ கம்பீரம் — பெண்மையின் நளினம்! மென்மை...! ஆ! மென்மை! பஞ்சு, நுரை, வசந்தம்! இத்தகைய ஒரு கழுத்தில் அவன் விடும் மூச்சு சுருண்டெழுந்து மீண்டும் அவன் கன்னத்தையே தாக்கும்போது ஏற்படுகிற அலாதி இன்பத்தில் அவன் கண்கள் கிறங்குகின்றன.

**காட்சி 2:** பையன் இப்போது கொஞ்சம் வளர்ந்திருக்கிறான். ஆயின் இன்னும் அம்மா செல்லமாகவே இருக்கிறான். அவன் தாய் முன்னிலும் அழகாயிருக்கிறாள். எடுப்பான மேனி, எழில் கொஞ்சும் வதனம். ஒப்பிட்டுப் பார்க்க வேண்டுமானால் உர்ஸுலா ஆண்ட்ரஸ்ஸை அழைக்க வேண்டும், அல்லது குறைந்தபட்சம் வாணிஸ்ரீயாவது வர வேண்டும்! வர்ணனை தேவையென்றால் காளிதாஸனைத் தருவிக்க வேண்டும். ஆயினும் என்ன, உடலின் பலப்பல அவயவங்களின் அழகுகளை ஒன்றுகூட்டி ஒரு மொத்தமாக வைத்தாலும் அது அந்தக் கழுத்தின் அழகுக்கு முன்னால் தலைகுனிய வேண்டியதுதான்!

இக்காட்சியில் கவினுறு கழுத்தின் பல தோற்றங்கள் தெரிகின்றன. பையனின் கை கழுத்தைச் சுற்றி வளைக்கிறது; அவன் அதரங்கள் கழுத்தை முத்த மிடுகின்றன; கண்கள் கழுத்தில் புதைந்து இருளைத் தருவித்துக்கொள்கின்றன; அவன் உடலே கழுத்திலிருந்து தொங்குகிறது; விரல்கள் கழுத்தை வருடுகின்றன. கிளுகிளுப்பு, சிலிர்ப்பு, சிரிப்பு! கழுத்தின் வெண்மையைப் பளிச்சென்று எடுத்துக் காட்டுகிறது மூன்று சரத்தில் ஒரு கருக மணி மாலை. தாலிச் சரடு தனியே தொங்குகிறது, தழையத் தழைய.

* * *

டெலிஃபோன் மணி அடித்தது.

''ஸாரநாதனுக்கு ஒதுக்கப்பட்ட நேரம் முடிந்து விட்டது. அடுத்த ஆசாமி வந்து காத்திருக்கிறார்.''

ரிஸப்ஷனிஸ்ட்டின் குரல் கேட்டதும் எரிந்து விழுந்தார் டாக்டர் குஹா. ''எந்தத் தலைபோகிற காரணமானாலும் என்னைத் தொந்தரவு செய்யாதே! காத்திருக்க முடியாதென்றால் திருப்பி அனுப்பு அவனை!''

ரிஸப்ஷனிஸ்ட்டுக்கு இது புது அனுபவம். கோபத்துடன் அவள் டெலிபோனை வைத்துவிட்டு, அடி உதட்டை மென்றுகொண்டே உட்கார்ந்திருக்கும் ஒரு மாஜி நடிகரை — அடுத்து உள்ளே செல்ல வேண்டிய நோயாளியை— வெறுப்புடன் பார்த்தாள். ''நீங்கள் சற்று நேரம் காத்திருக்கத்தான் வேண்டும்'' என்று கூறிவிட்டு மீண்டும் 'ரீடர்ஸ் டைஜஸ்டி'ல் ஆழ்ந்துபோனாள்.

டெலிஃபோனை வைத்து விட்டு நிமிர்ந்தபோது, ஸாரநாதன் அறையினுள் உலாவ ஆரம்பித்து விட்டதைக் கண்டார் டாக்டர் குஹா. நல்லவேளை, இந்த டெலிஃபோன் இடையூறினால் அவன் பேசுவதை நிறுத்திவிடவில்லை. நடமாட ஆரம்பித்திருந்த போதிலும் நா அசைந்து கொண்டேதான் இருந்தது. அவன் சிந்தனை ஓட்டத்தைக் கலைக்காமல், ஓசைப்படுத்தாமல் அமர்ந்தார் டாக்டர் குஹா. செவிப்புலன்கள் மேலும் கூர்மையாயின. படுத்தபடி பேசுவதை விட நடந்தபடி பேசுவது அவனுக்கு எளிதாயிருக்குமானால் அவ்வாறே செய்யட்டும். ஆனால் ஊசி போட்டிருப்பதால் ஒருவேளை அவன் கொஞ்சம் நிலைதடுமாறலாம். அச்சமயம் பாய்ந்து சென்று தாங்கிப் பிடித்துக் கொள்ளத் தயாராயிருந்தால் போதும்.

**காட்சி 3:** சிறுவனுடைய கேசத்தைப் பிடித்து இழுத்துத் தாயிட

மிருந்து அவனைக் கிழிப்பது போல் பிரித்துப் போடுகிறான் ஒரு முரடன். அவனைப் பார்த்தால் பத்தாண்டுகள் சிறையில் கழித்துவிட்டு வந்தவனைப்போல் தோன்றுகிறது. சிவந்த விழிகள், சிக்கேறிய தலை, நெற்றி வடு, நுரை தள்ளும் வாய்! ஓவியம் மணக்குமா என்ன? பின்னர் எங்கிருந்து இந்தச் சாராய வாடை வீசுகிறது? ''வயசு பன்னிரண்டாகிறது; இன்னும் அம்மா கிட்டே என்னடா கொஞ்சல்?'' என்று கேட்கும் பாவனை அந்த முரடன் முகத்தில் தெரிகிறது. 'அதற்குக் காரணம், தகப்பன் என்ற ஸ்தானத்தில் வைத்து அச்சிறுவன் மதித்துப் போற்ற வேண்டிய ஒருவன் பத்து வருஷங்களாய்க் குடும்பத்தை விட்டுப் பிரிந்து சிறைத் தண்டனையை அனுபவித்து வருவதுதான்' என்று அந்த முரடனுக்கு எடுத்துச் சொல்ல அங்கே யாரும் இல்லை. தோலாக உரித்து அறைக்கு வெளியே வீசப்பட்ட சிறுவன் மிரண்டு பீதியுடன் தரையில் கிடந்து நடுங்குகிறான்.

**காட்சி 4:** சாத்தப்பட்டிருக்கும் கதவுக்கு வெளியே சிறுவன் ஏக்கத்தோடும் கோபத்தோடும் காத்திருக்கிறான். தனக்கே, தன் ஒருவனுக்கு மட்டுமே இந்நாள் வரை உரியவளாய் இருந்த அம்மாவை அந்த முரடன் அறைக்குள்ளே அடிப்பதும் கேட்கிறது. அணைப்பதும் புரிகிறது. மார்கழி மாதத்துக் கோலத்தின் மேல் மாட்டுச் சாணம் விழுந்தாற்போல் இந்தக் கடிவன் ஏன் என் அம்மாவை இப்படி அசிங்கப்படுத்துகிறான்? அம்மாவை மீண்டும் எப்போ பார்ப்போம்? அவளிடம் தஞ்சம் புகுந்து விம்மி அழுது, கண்ணீரால் அவள் கழுத்தை நீராட்டிப் புனிதப் படுத்த வேண்டுமே!...

**ஸா**ரநாதனின் மனமண்டபத்தில் ஓவியக் கண்காட்சி ஒன்றைப் பார்த்துக் கொண்டிருந்தார் டாக்டர் குஹா. ஒவ்வொரு படத்தையும் நுணுகி ஆராய்ந்தார். ஒவ்வொன்றும் கதையை வளர்த்தது; அவன் மன நோயைப் புரிந்துகொள்ளும் முயற்சியில் அவர் முன்னேற்றம் காணவும் உதவியது.

ஸாரநாதன் டாக்டர் குஹாவுக்குப் பின்புறமாக உலா வந்து கொண்டிருந்தான். இது அவ்வளவு சரியல்ல; அவனை நம் கண்ணெதிரே நடமாட விடுவதுதான் நல்லது என்று டாக்டர் குஹாவின் அறிவின் அடிவாரத்தில் தந்தி மீட்டியது போல் ஓர் எண்ண அலை எழுந்தது. ஆனால் ஸாரநாதனின் கதை விரிந்துகொண்டே போகப் போக அந்தக் கதைக் கடலில் இந்த மௌன அலை கலந்து இருந்த இடம் தெரியாமல் கரைந்து போயிற்று. ஆர்வம் அறிவுக்குத் திரை போட்டது. டாக்டர் குஹா சிறு தவறு செய்து விட்டார்.

**காட்சி 5** கதவு திறந்திருக்கிறது. முரடன் மகனைத் தூக்கித் தோள் வரை உயர்த்தி உத்தரத்திலிருந்து தொங்கும் அவன் தாயைக் காட்டுகிறான். 'வேண்டாம், வேண்டாம்' என்று சிறுவன் கால்களை உதைத்துக் கொண்டும் கூடத் தகப்பன் கேட்கவில்லை; பலவந்தப் படுத்துகிறான்.

தாயின் கழுத்தில் மகனுடைய பார்வை நிலைக்கிறது. அதில் ஏன் அப்படி நீலம் படர்ந்திருக்கிறது? ஏன் ஜீவனற்றுத் தோன்றுகிறது? மனோரஞ்சிதத்தின் மென்மையும் சுகந்தமும் உடைய அந்தக் கழுத்து இப்படி மரக்கட்டை போல் தோற்றமளிப்பது எதனால்? படுக்கையைச் சுற்றிக் கட்டும் கயிறு அம்மாவின் கழுத்தைச் சுற்றி வளைக்கக் காரணம் என்ன? அந்தக் கயிற்றின் இறுகிய பிடியினுள் அம்மா அடிக்கடி கண்ணிலே ஒற்றிக் கொள்ளும் தாலிச் சரடு சிக்கி யிருக்கிறதே! நீண்ட கண்டத்தினைப் பெருமையோடு அலங்கரித்த கருகமணி மாலை அறுந்து போகப் பாதி நெஞ்சிலே உராய்வதும் பாதி தரையில் சிதறிக் கிடப்பதும் ஏன்? தாயின் ஆடைகள் ஏன் இப்படி அலங்கோலமாயுள்ளன? அவள் விழிகள் ஏன் இப்படிப் பிதுங்கி... ஐயோ! பார்க்கப் பயமா யிருக்கிறதே! வீரிட்டு அலறுகிறான் சிறுவன், அருவருப்பும் பயங்கரமும் அடைந்து.

(சினிமாவானால் இந்தக் கட்டத்தில் நிச்சயம் இடியும் மழையும் மின்னலும் தோன்றும் என்று நினைத்தார் டாக்டர் குஹா. ஒரே ஒரு விநாடி புன்முறுவல் தோன்றி மறைந்தது அவர் முகத்தில். அடுத்து அந்தச் சோகக் கதையில் அவர் மனம் மீண்டும் லயித்தது.)

அதோ அந்த முரடன் — பெண்டாட்டியைத் தூக்கிலே போட்டது மல்லாமல் அவள் உத்தரத்திலிருந்து தொங்குவதை மகன் பார்க்க வேண்டும் என்று கட்டாயப்படுத்திய கிராதகன் — ஏதோ சொல்கிறானே? என்ன கூறுகிறான்?

புது தில்லி ஜோக்!











'பத்து வருஷங்கள் இவள் எப்படிப் பதிவிரதையாக இருந்திருக்க முடியும்? இத்தனை அழகான ஒருத்தியை ஊனர்க் காலிகள் பத்து வருஷங்களாகச் சும்மா

விட்டு வைத்திருப்பார்களா? இவனுக்குச் சாப்பாட்டுக்குத்தான் வேறு என்ன வழி? அதனால்தான்! அதனால்தான்! மகனே, பெண்களை நம்பாதே, நம்பவே நம்பாதே!'

• • •

"அடப்பாவி! இப்படி ஓர் அபத்தமான, ஆதாரமற்ற சந்தேகத்துக்காகவா அவளைத் தூக்கிலே தொங்க விட்டாய்? சிறுவன் ஒருவனின் பரிமளமான மனத்தைப் பேதலிக்கச் செய்தாய்?'' டாக்டர் குஹாா இவ்வாறு கேட்டு முடியவில்லை.

அதற்கு முன்னால் தம் கழுத்தில் ஒரு பாம்பு நெளிவது போல் உணர்ந்தார். அதனைத் தட்டிவிட யத்தனித்தார். அறிவின் உத்தரவுக்குக் கரம் கீழ்ப்படியும் முன்னரே கழுத்தில் அந்தப் பாம்பு ஜில்லென்று சுருண்டு சுருங்கி இறுக்கியது. 'பாம்பல்ல இது! கயிறு! ஐயோ! மூச்சு முட்டுகிறதே! கத்தலாமென்றாலும் தொண்டை எழவில்லையே! தன்னை ஸைக்கோ ஸாரநாதன்தான் கொல்லப் பார்க்கிறான்! அடேய்! என்னை விடடா, விடு! உனக்கு நல்லது செய்ய வந்தவன் நான். நான் சொல்வது அவனுக்குக் கேட்கவில்லையே! தவறு, தவறு! என் குரல்தான் எழும்பவில்லை! ஐயோ, நான் என்ன செய்வேன்? கண்கள் இருண்டு போகின்றன; மூச்சு முட்டித் திணறுகிறது! ஸாரநாதா! உனது நாற்பத்து மூன்றாவது கொலை இது! ஆனால் மறக்காதே, நீ என்னை ஜெயிப்பதற்கு முன்னால் நான் உன்னை வென்று விட்டேன்! நோயுற்ற உன் மனத்துக்குள் புகுந்து பார்த்துவிட்டேன்! உன் மன நோய்க்கான காரணங்களை ஆராய்ந்தறிந்து கொண்டுவிட்டேன்! இனி நான் செத்தாலும் வெற்றி என்னுடையதுதான்! வெற்றி! வெற்றி! அது இப்படித்தான் இருண்டு கிடக்குமா? இருள், மோனம், சூன்யம். சூன்யத்துக்கும்கூட இடமில்லாத ஒரு நிலை!.....

ஸாரநாதனின் கரங்கள் தளர்ந்தன. அவனைப் பொறுத்தவரையில் இது உணர்ச்சிக் குவியலின் சரிவு! இருள், மிதப்பு. மயக்கத்துக்கும் நினைவுக்கும் இடையே ஓர் ஊசலாட்டம். அமைதி, அளப்பரிய ஆனந்தம், நிர்மலமான நிர்வாண நிலை! இன்பத்தின் எல்லை, நெடுமூச்சு, விடுதலை!

தாற்காலிக விடுதலை! மறுபடியும் உணர்ச்சிக் குவியல்கள் படிப்படியாக உயர்ந்து நெஞ்சை அடைத்துத் திக்குமுக்காடப் பண்ணிக் கைகளைப் பரபரக்க வைக்கும் வரை; கண்களை ஒரு கயிற்றைத் தேடி அலையச் செய்யும் வரை அவனுக்கு விடுதலை!

அந்த விடுதலையை உறுதிப்படுத்திக் கொள்ள அவன் விடுவிடென்று அந்த அறையை ஆராய்ந்தான். அலமாரியில் அகப்பட்ட டாக்டருடைய 'ஸூட்' ஒன்றை அணிந்து கொண்டான். அவர் மேஜை இழுப்பறையில் இருந்த மூவாயிரத்துச் சொச்சம் ரூபாயை பாண்ட் பாக்கெட்டில் எண்ணிப் பாராமலேயே செருகிக் கொண்டான். அவருடைய கறுப்பு மூக்குக் கண்ணாடியையும், தொப்பியையும் அணிந்து அறையை விட்டு வெளியேறினான். வரவேற்பு அறையில் இருந்தவர்களுக்கு முதுகைக் காட்டியபடி மாடிப் படிகளில் இறங்கி வீதியை அடைந்தான்.

ரிஸப்ஷனிஸ்ட்டின் தலை சுவாரசியமான 'ரீடர்ஸ் டைஜஸ்ட்' கட்டுரையை விட்டு மேலே உயரவில்லை. ஆண் — பெண் உறவு பற்றிய கட்டுரை அது. இந்த ரகக் கட்டுரை ஒன்று அப்பத்திரிகையில் பிரதி மாதமும் நிச்சயம் உண்டு.

மாடிப்படியிலிருந்த போலீஸ்காரர்கள், 'நோயாளி உள்ளேயே இருக்க டாக்டர் மட்டும் எங்கே இவ்வளவு அவசரமாகப் போகிறார்?' என்று நினைத்தார்கள். அடுத்து டாக்டரால் பரிசோதிக்கப்பட விருந்த மாஜி நடிகர், ''டாக்டர் எங்கே கிளம்பிவிட்டார்? திரும்பி வர நேரமாகுமா?'' என்று ரிஸப்ஷனிஸ்டைக் கேட்டார், காத்து அலுத்த தொனியில்.

ரிஸப்ஷனிஸ்ட்டின் முகம் புதிராகியது. அவள் எழுந்து ஆடையைச் சரிசெய்து கொண்டாள். கைப்பையிலிருந்து கண்ணாடியை எடுத்து ஒரு தடவை தன் முகத்தைப் பார்த்துக் கொண்டாள். பின்னர் ஒய்யாரமாய் நடந்து டாக்டரின் அறைக் கதவைத் திறந்து உள்ளே நுழைந்தாள்.

ஓரிரு விநாடிகள் கழிந்தன. அந்த அறையினுள்ளிருந்து 'வீல்' என்ற பீதி நிறைந்த பெண் குரல் வெளிப்பட்டது. போலீஸாரில் ஒருவன் ஃபோனுக்குப் பாய்ந்தான். மற்றொருவன் டாக்டரின் அறைக்குள் எட்டிப் பார்த்து விட்டுத் தலைதெறிக்கத் தெருபக்கம் ஓடினான்.

ஆனால் ஸாரநாதனுக்குத் தேவையான சில விநாடிகள் கிடைத்துவிட்டன. அவன் ஒரு டாக்ஸியில் ஏறி வெகுதூரம் போய்விட்டான். அடுத்த சில நிமிடங்களில் டாக்ஸியை அனுப்பிவிட்டு அவன் நடைபாதையில் பொய்த் தாடி மீசைகளை விற்றுக் கொண்டிருந்த ஒரு வியாபாரியிடம் பேரம் பேசினான். பின்னர், நவீன பாணி ஹிப்பி உடைகளை விற்கும் ஆடம்பரமான துணிக் கடை ஒன்றினுள் நுழைந்தான். (தொடரும்)



● அஸ்ஸாம், ஷில்லாங்கில் ஓட்டுரிமையை கருத்துடன் பயன்படுத்தும் இளநங்கை.

கல்கி
ஏப்ரல் 16

# இளைஞர் மலர்

● புதிய அம்சங்கள் ● இளைஞர் சமுதாயம் — வாலிப சங்கங்களுக்கு நேரில் விஜயம் செய்து அளவளாவி எழுதப்படும் கட்டுரைகள் ● தெரிந்த விளையாட்டு : தெரியாத விவரம் ● சிறப்புச் சிறுகதைகள் ● இன்றையப் பிரச்னை — நிபுணர்களுடன் பேட்டி ● அன்பே அகிலா! — புதிய சித்திரத் தொடர்கதை ● வாரம் ஒரு நகைச்சுவைக் கதை ● இளைஞர்களை ஈர்க்கும் இதர பல விஷயங்கள்.

# கிராம்டன் அறிமுகப்படுத்துகிறது:




**உண்மையிலேயே லீக் ப்ரூப்பான முதல் ட்ரை பாட்டரி. அது சாதாரண பாட்டரிகளை விட இரு மடங்கு நீடித்துழைக்கக் கூடியது!**

கிராம்டன் தயாரிப்பு என்றாலே
நிச்சயம் அது தனியொரு சிறப்பு
வாய்ந்ததாகவே இருக்கும்.
மும்முறை சீலிடப்பட்ட கிராம்டன்
ட்ரை பாட்டரி என்றால் கேட்கவே
வேண்டும்! அது சாதாரண
பாட்டரிகளை விட இரு மடங்கு
நீடித்து உழைக்கக் கூடியது.
லீக்காகும் பாட்டரியினால் நேரும்
தீங்குகளிலிருந்து உங்களது
டிரான்ஸிஸ்டர், டேப் ரெக்கார்டர்
போன்றவைகளை அது
பத்திரமாகப் பாதுகாக்கிறது.

**உண்மையிலே லீக் ப்ரூப்
பாட்டரி என்பது
கிராம்டன்!**




AIYARS-CG. 156 TP

# வணக்கம் சௌக்கியமா?

## இரு இல்லத்தரசிகளின் சந்திப்பு

இவ்வாரம் உரையாடலில் கலந்துகொள்பவர்கள்:

**ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி வெங்கட்ராமன்**
**ஸ்ரீமதி உஷா லக்ஷ்மிநாராயண ராவ்**


திரு வெங்கட்ராமன்


திரு லக்ஷ்மிநாராயண ராவ்

(மயிலாப்பூர் எட்வர்ட் எலியட்ஸ் சாலையிலுள்ள உட்லண்ட்ஸ் ஹோட்டல். மாலை நேரமாக இருந்ததால் ஆங்காங்கே தனித்தனியே வரவேற்பு விருந்து, பிரிவுபசார விருந்து, பாராட்டு விருந்து என்று நடை பெற்றுக் கொண்டிருந்தன. சாரிசாரியாகக் கார்கள் வந்து போய்க் கொண்டிருந்தன.

அங்கு வருவோரின் சௌகரியத்துக்காக ஏற்படுத் தப்பட்டிருக்கும் பெரிய ஹாலில் இந்தச் சந்திப்பு நிகழ்ந்தது.

பிரபல பட்டு ஜவுளி வியாபாரிகளான சம்பூர்ண சாஸ்திரியார் அண்ட் சன்ஸ் மானேஜிங் பார்ட்னரான திரு ஏ. எஸ். வெங்கட்ராமன் தமது மனைவியுடன் வந்தார். உட்லண்ட்ஸ் ஹோட்டலை நிறுவி, திறம்பட நடத்திவரும் திரு கிருஷ்ண ராவின் குமாரர்களில் ஒருவரான திரு லக்ஷ்மிநாராயண ராவ் தமது மனைவி யுடன் அவர்களை வரவேற்றார்.)

*ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி வெங்கட்ராமன்:* ராணி எலிசபெத்தும் அவருடைய கணவர் பிலிப்ஸ் கோமகனும் விருந்தில் கலந்து கொண்ட போட்டோ மாட்டியிருக்கிறதே.... அந்த விருந்து இங்கேதான் நடந்ததா?

*ஸ்ரீமதி உஷா லக்ஷ்மிநாராயணராவ்:* ராணி எலிசபெத்துக்குச் சிறிய முறையில் விருந்து தயாரிக்கும் பொறுப்பை உட்லண்ட்ஸிடமே கொடுத்தார்கள். அதைப் பெரும் பாக்கிய மாகக் கருதுகிறோம் நாங்கள். சிறப்பான முறையில் விருந்து தயாரித்து, மவுண்ட் ரோடு ராஜாஜி ஹாலுக்கு எடுத்துச் சென் றோம். அந்த விருந்தின்போது எடுத்த போட்டோதான் இது.

*ராஜலக்ஷ்மி:* ஒரு திருமண வரவேற்புக்கு இங்கே வந்திருந்தபோது கவனித்தேன். மூங் கிலைக் கொண்டு கூரை வேய்ந்திருக்கும் ஹாலில்தான் டீபார்ட்டி நடந்தது. ரொம்ப விநோதமாக இருந்தது. அது ஏன் அப்படிக் கட்டப்பட்டிருக்கிறது?

*உஷா:* முன்பு சென்னைக்குச் சீனப் பிரதமர் சூ யென் லாய் வந்திருந்தாரல்லவா? அவருக்கு ஒரு விருந்து கொடுக்க ஏற்பாடாகியது. அந்த மண்டபம் கட்டி முடியும் சமயம். முதன் முதலாகச் சீனப் பிரதமருக்கு அங்கு விருந்து நடப்பதென ஏற்பாடாயிற்று. அதனால் சீனப் பாணியில் அமைந்திருக்கட்டுமே என்று அதை பாம்பூ ஹாலாக அதாவது மூங்கிலால் ஆன அறையாக உருவாக்கினோம். வெளி நாட்டி லிருந்து வருவோர்க்கு அந்த இடம் மிகவும் பிடிக்கிறது.

உங்கள் ஜவுளிக் கடை ஆரம்பித்து எத்தனை வருஷமாயிருக்கும்?

*ராஜலக்ஷ்மி:* . என் மாமனார் , சம்பூர்ண சாஸ்திரியார் 1902ல், அதாவது எழுபது வருஷங்களுக்கு முன்னால் ஆரம்பித்தார். உட் லண்ட்ஸ் ஹோட்டல் வெள்ளி விழா கொண் டாடியிருக்குமே?

*உஷா:* இதை ஆரம்பித்து முப்பத்தி நான்கு வருஷங்கள் ஆகின்றன. 1902 முதலே புடவைக் கடை நடக்கிறதென்றால் உங்கள் மாமனார், நாமெல்லாம் சொப்பனத்தில்கூட நினைக்க முடியாத அளவுக்குக் குறைந்த விலையில் பட்டுப் புடவைகள் விற்றிருப்பார்!



*ராஜ:* ஆமாம். சொன்னால் யாரும் இந்தக் காலத்தில் நம்பத் தான் மாட்டார்கள்! ஒன்பது கெஜம் பட்டுப் புடவை பதி னெட்டு ரூபாய்; ஆறு கெஜம் புடவை பன்னிரண்டு ரூபாய் என்று விற்றிருக்கிறது அந்த நாட்களில், ரூபாய்க்குப் பத்துப் படி அரிசி விற்ற காலம்! உங்கள் மாமனாரும் சுய முயற்சியால் முன்னுக்கு வந்தவர்தானே? அவர் வீட்டு மருமகளாக வந் திருக்கும் நீங்கள் அந்தப் பழைய நாட்களைப் பற்றி நிறையத் தெரிந்து கொண்டிருப்பீர்களே?



பல் டாக்டர்: சீப்பும் பல்லெல்லாம் வாருக இருக்கிறது?

மனைவி: எதுக்குக் கேட்கிறீங்க? குழந்தை "நான்தான் அப்பாவாம்" என்று சொல்லிக்கொண்டு விளையாடினான். சீப்பைப் 'பேஷன்'டாக வச்சிண்டு!"

உஷா: ஓ! என் கணவர் அடிக்கடி சொல்வார், அவர் தகப்பனார் பட்ட கஷ்டங்களைப் பற்றி. தெய்வபக்தியும், கடுமையான உழைப்பும், பரந்த குணமும், மக்களிடம் அன்பும் கொண்டிருந்தால், முன்னுக்கு வந்து விடலாம் என்பதற்கு என் மாமனாரே சாட்சி. உங்கள் கடையின் வாடிக்கையாளர்களில் பெரும் புள்ளிகள் பலர் இருப்பார்களே?

ராஜு: ஜாபிதாவே கொடுத்துவிடலாம். அத்தனை பிரமுகர்களுடன் தொடர்பு உண்டு. டாக்டர் ராதாகிருஷ்ணனுக்கு அவர் ஜனாதிபதியாக இருந்தபோது வேஷ்டிகளைப் புதுடில்லிக்கு விமானம் மூலம்கூட அனுப்பியிருக்கிறோம். இப்போதும் அவருக்கு எங்கள் கடையிலிருந்துதான் நைஸ் வேஷ்டிகள் அனுப்பப்படுகின்றன.

உஷா: ஆமாம். புடவைக் கடையில் வாங்குவதை விட உற்பத்தியாகும் இடங்களுக்கே போய் வாங்கினால் விலை மலிவு என்று சிலர் காஞ்சிபுரம் போகிறார்களே? அங்கே விலை பட்டணத்தைவிட மலிவா என்ன?

ராஜு: விசேஷமாகச் சொல்ல முடியாது. பட்டணத்திலேயிருந்து காஞ்சிபுரம் போகும் செலவு என்ன? அதையெல்லாம் கணக்குப் பார்த்தால் கிட்டத்தட்ட ஒரே விலைதான் இருக்கும். கல்யாணம் போன்ற பெரிய நிகழ்ச்சிகளின்போது நிறையப் புடவைகள் வாங்கினால் உற்பத்தி ஸ்தானத்திலேயே பெறுவது கொஞ்சம் மலிவாக இருக்கலாம். ஆனால் கடைகளில் உள்ள பலதரப்பட்ட டிசைன்கள், உற்பத்தி செய்யுமிடத்தில் இருக்காது. எங்களுக்குக் காஞ்சிபுரத்தில் சொந்தத்தில் நிறையத் தறிகள் இருக்கின்றன.....உங்கள் கணவர் வெளி நாடு போய்த் திரும்பி யிருக்கிறார் இல்லையா?

உஷா: ஆமாம்; என் மாமனார், தாம் வளர்த்த நிறுவனத்தைத் தம் பிள்ளைகள் கட்டிக் காக்க வேண்டும் என்ற திட்டத்துடன் இதையே முழுமூச்சாகக் கவனிக்க வைத்திருக்கிறார். அவரது பிள்ளைகள் அனைவருமே இதில் கண்ணும் கருத்துமாய் இருக்கிறார்கள். வெளி நாடுகளில் ஹோட்டல் தொழில் எப்படி நடக்கிறது எனத் தெரிந்துகொள்ள அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், ஸ்விட்ஜர்லாந்து, ஜெர்மனி, ஹாலந்து முதலிய நாடுகளுக்குப் போய் வந்தார் என் கணவர்.

என் மாமனார் வெளிநாடு சென்று திரும்பிய அனுபவத்தில்தான், சென்னையில் முதன் முதலாக, 'டிரைவ் - இன் - ரெஸ்டாரெண்'டை ஆரம்பித்தார்..... புடவைகளுக்குப் புதிய பெயர்களைத் தீபாவளி சீஸனுக்குச் சூட்டுகிறார்களே, இதில் உங்களை உங்கள் வீட்டுக்காரர் கலந்தாலோசிப்பதுண்டா?

ராஜு: உண்டு. அவ்வப்போது நானும் பெயர்களை எழுதிக் கொடுத்திருக்கிறேன். இலக்கிய நயமான பெயர்களை வைத்தால் எடுபடுவதில்லை. சினிமாப் படங்களின் பெயர்களை வைத்தால்தான் மவுசு ஏற்படுகிறது.

உஷா: நமது பிரதமர் இந்திரா காந்தி, தகவல் ஒலிபரப்பு அமைச்சராக இருக்கையில் உட்லண்ட்ஸில் ஒரு விருந்துக்கு வந்திருந்தார். அந்தச் சென்னை விஜயத்தின் போதே உங்கள் கடைக்கும் அவர் வந்ததாக எனக்கு ஞாபகம். சரியா நான் சொல்வது?

ராஜு: ரொம்ப சரி, ஸ்ரீமதி மஞ்சுபாஷிணி தான் அழைத்து வந்தார். ஸ்ரீமதி மஞ்சுபாஷிணி காலையில் டெலிபோனில் என் கணவரிடம் பேசி ஸ்ரீமதி இந்திரா வரப்போவதைத் தெரிவித்தார். மாலையில் கடையில் அதற்காக விசேஷ ஏற்பாடு செய்து காத்திருந்தோம். குறித்த நேரத்துக்கு வந்துவிட்டார்.

உஷா: நீங்களும் அவர் வந்திருந்தபோது உடன் இருந்து கவனித்தீர்களா? எல்லாப் பெண்களையும் போல் புடவைகளை ஆற அமர நிதானமாகப் பார்த்து 'செலக்ட்' பண்ணினாரா?

ராஜு: அவருக்கு அதற்கு நேரம் ஏது? என் கணவரே சில விசேஷப் புடவைகளை எடுத்துப் போட்டுப் புடவைகளின் சிறப்புகளையும் ஆங்கிலத்தில் எடுத்துச் சொன்னார். 'ரொம்பப் பிரபலமடைந்துள்ள புடவை இது' என்று ஒன்றை வர்ணித்தார். 'எனக்கு இது வேண்டாம். தனித் தன்மை பொருந்தியதாக ஏதாவது எடுங்கள்' எனப் பளிச்சென்று சொல்லிவிட்டார் இந்திரா. சில நிமிஷங்களில் ஓர் அலாதியான மோஸ்தரில் ஒரு புடவையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு புறப்பட்டார்.

உஷா: நமது இளம் பெண்கள் இந்திரா காந்தியை எண்ணிப் பெருமைப்படுகிறார்கள். ஆனால் தோற்றத்தில் அவரைப் பின்பற்றுகிறார்களா? இல்லையாது. புடவையை விட மேல் நாட்டுப் பாணி உடைகளில் ஆசை வைத்து மாறிக்கொண்டு வருகிறார்களே.

ராஜு: ஏதோ சில பெண்கள்தான் அப்படி. இதற்கு ஈடு செய்வது போல் மேல் நாட்டினரிலும் சிலர் நம் உடை நாகரிகத்தைப் பின்பற்றுகிறார்கள். ஏராளமான மேல் நாட்டவர்கள் எங்கள் கடைக்கும் கல்கத்தா கிளைக்கும் வருகிறார்கள்.

(இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போதே வெளிநாட்டு யுவதிகள் நால்வர் கதரினாலும், கைத்தறியினாலும் ஆன புடவை ரவிக்கை உடுத்தி, கழுத்தில் பவழ மாலை சகிதம் ஹோட்டலுக்கு டாக்ஸியில் வந்து இறங்கினார்கள். குங்குமப் பொட்டும் வைத்திருந்தனர். வேட்டியும், ஜிப்பாவும் அணிந்த வெளிநாட்டு வாலிபர்களும் வந்தனர் இன்னொரு டாக்ஸியில். அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்ததில் பேச்சுத் தடைப்பட்டது சற்றுநேரம். அவர்கள் கவனம் மீண்டதும் திரு வெங்கட்ராமன் தம்பதியர் விடை திரும்ப விடைபெற்றுக் கொண்டனர்.)

உரையாடல் தொகுப்பு: **ஏ. சுவாமிநாதன்**





# புகைப்படப் போட்டி





அசைபோட்டுத் தின்பது மாடு;

அசையாமல் விழுங்குவது விடு!

மேற்படி பழமொழிக் கேற்க நல்ல புகைப்படங்களை (தேர்வு) அனுப்பி முதல் பரிசான ரூ. 50 பெறுபவர்:

திரு பி. சுந்தரம்

22. இரண்டாவது மெயின் ரோடு, கலி. ஐ. டி. நகர், சென்னை - 35.

பரிவுப் பரிசைத் தட்டிக் கொண் செல்பவர்:

திரு எஸ். பாலசுப்பிரமணியம்

15, புஷ்பநகர் மெயின்ரோடு, சென்னை 34.

"அசை போட்டுத் தின்றாத மாடும் உண்டு.(காரணம்: சிலை!) அசைபோட்டு விழுங்கும் விடும் உண்டு. (காரணம்: பாரம் தூக்கி அசைந்தாக வேண்டும்!)'' என் கிறார் பங்களூர் விதான சபா கட்டப்படும்போது படமெடுத் துள்ள பாலசுப்பிரமணியம்.

# டேபிள் டென்னிஸ் வீரர் ஜகந்நாத் பிலிப்ஸ் சைக்கிள் உதவியினால் உடல் வளத்தை தெம்புடன் வைத்திருக்கிறார்

டேபிள் டென்னிஸ் பந்தயங்களில் ஜகந்நாத் மிகத் துடிப்புடன் விளையாடுகிறார். இந்தியாவின் தலை சிறந்த விளையாட்டு வீரர் ஜகந்நாத்துக்கு எப்பொழுதும் துடிப்புடன் இருப்பதன் அவசியம் தெரியும். தினசரி தன் பிலிப்ஸ் சைக்கிளில் சவாரி செய்வதன் மூலம் அவர் எப்போதும் தெம்புடன் செயல் படுகிறார். அதில் சந்தேகம் இல்லை. உலகப் புகழ்வாய்ந்த பிலிப்ஸ் ஊக்கமிகு வாலிபர்களுக்கு உகந்தது. கவர்ச்சி யானது. அனாயாசமாய் சவாரி செய்ய வல்லது. கரடு முரடான சவாரிக்கும் ஈடுகொடுக்க வல்லது.

கடுமையாக உழைத்து உங்களை எங்கு வேண்டுமானாலும் எடுத்துச் செல்லும்.

*ஊக்கமிகு வாலிபர்கள் உகந்து வாங்குவது பிலிப்ஸ் சைக்கிள்.*



TIC/PH/6641

# பிலிப்ஸ்

இந்தியாவில் தயாரிப்போர்:

**டிஐ சைக்கிள்ஸ் ஆஃப் இந்தியா**

அம்பத்தூர், சென்னை-53.

உரிமையாளர்கள்: டியூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட் பதிவுபெற்று உபயோகிப்போர்

# உடலில் ஊனம்; உள்ளத்தில் உற்சாகம்!

☐ 'ஜாக் கிறிஸ்ட்யன்' என்ற அமெரிக்கக் கால் பந்தாட்டக்காரர் புகழின் உச்சியில் இருக்கும் போது துரதிர்ஷ்டவசமாக ஓர் இயந்திரத்தின் பிடியில் அவரது கை சிக்கிக் கொண்டு ஒரு கை முழுதும் துண்டிக்கப்பட்டுவிட்டது. கையை இழந்த அவரால் வேகமாக ஓட முடியவில்லை. ஆனால் அவரது உற்சாகம் நிற்கவில்லை. ஒரு சிறுவனைத் தேடிப் பிடித்துத் தன்னுடைய திறமை முழுவதும் பிரயோகித்து அவனைத் திறமை மிக்க கால்பந்தாட்டக்காரனாக உருவாக்கினார். 'எலிஸ் ஜோன்ஸ்' என்ற அந்தச் சீடன் உலகப் புகழ் பெற்றான். இவனைப் பற்றி ஒரு சிறு குறிப்பு: சிறு வயதிலேயே இவனும் ஒரு கையை இழந்தவன்!





☐ அழகான மூன்று வயதுச் சிறுமிதான். ஆனால் அவள் முகத்தில் சோகம்! காரணம் இளம் பிள்ளைவாத நோய் அவளைப் பிடித்துவிட்டது. "இனி உன்னால் நடக்கவே முடியாது" என்று டாக்டர்கள் சொல்லிவிட்டார்கள். 'நீச்சல் கற்றுக் கொண்டால் ஒரு வேளை கால்கள் பலம் பெறலாம்' என்றனர். அதற்காக நீச்சல் பயில ஆரம்பித்த அவள் நாளடைவில் நீச்சல் வீராங்கனையாகிவிட்டாள்! பதினைந்தாவது வயதில் இருபத்தெட்டு 'ரிகார்டு'களை ஏற்படுத்தினாள். இத்தனைக்கும் 'நான்சி தொக்கி'யின் கால்களுள் ஒன்று மற்றதைவிட ஓர் அங்குலம் சிறிது!



☐ செவிடாகவும் ஊமையாகவும் (Deaf and Dumb) இருந்ததால் 'டம்மி' என்று கேலிக்குள்ளான டெய்லர் என்பவர் 'பேஸ் பால்' விளையாட்டில் மன்னராக விளங்கியவர். என்ன தோன்றியதோ டம்மி டெய்லர் ஒரு பையனைப் பொறுக்கி எடுத்துத் தினமும் அவனுடன் விளையாடிப் பயிற்சியளித்தார். அச்சிறுவன் வளர்ந்து உலகச் சாம்பியனான போது எல்லோரையும் விட டம்மி டெய்லரே அதிகம் மகிழ்ந்தார். காரணம் அவரது சீடர் 'டிக்கி பெக்'கும் ஓர் ஊமை - செவிடு!

☐ எவரெஸ்ட் மெக்கோவனுக்கு இளம் வயதில் திடீரென முதுகில் ஏதோ பிசகிக் கொண்டு பொறுக்கமுடியாத வலி ஏற்பட்டது. எல்லா டாக்டர்களும் கையை விரித்துவிட்டபோது ஒரு மிருக வைத்தியர் 'உன்னுடைய வலியை நிச்சயமாக என்னால் குணப்படுத்த முடியும். ஆனால் மிருகங்களுக்குச் செய்யும் சிகிச்சையை உனக்குச் செய்வேன். பரவாயில்லையா?' என்றார். 'உம்' என்று தலையசைத்தார் எவரெஸ்ட். வலியாவது வலி! எப்படியோ பொறுத்துக் கொண்டார். அடுத்த சில ஆண்டுகளுக்குள்ளாகவே அவர் மிகக் குறைந்த நேரத்தில் (146 மணி நேரம்) 806 மைல்கள் பனியில் சறுக்கிச் சென்று உலக ரிகார்டு ஏற்படுத்தினார்.



☐ அந்த அமெரிக்கச் சிறுவனுக்குச் சிறு வயதிலிருந்தே ஜீரண உறுப்புக்கள் சரியாக இயங்கவில்லை. திடப் பொருள் எதையும் அவனால் சாப்பிட முடியாது. சோனியாகவும், பலவீனமாகவும் இருந்த அவன் உடற்பயிற்சி செய்து கொஞ்சம் கொஞ்சமாகத் தன் உடலைத் தேற்றிக் கொண்டு உலகம் பாராட்டும் அளவுக்கு 'கோல்ஃப்' விளையாட்டில் 'நம்பர் ஒன் சாம்பியன்' என்று புகழ்பெற்றான். பெயர்: பாபி ஜோன்ஸ்.





☐ ஒரு விபத்தில் ஒரு கண்ணை இழந்துவிட்டார் அவர். வருந்திப் பயனில்லை என்று தம்முடைய கிரிக்கெட் மட்டையை எடுத்துக் கொண்டு பயிற்சி செய்ய ஆரம்பித்தார். ஒரு கண் பார்வை பழக்கமாகி ஒரு தேசத்தின் காப்டனாக விளங்கினார்.

☐ மற்றொருவருக்குச் சிறு வயதிலிருந்தே ஒரு கையில் வாதம். நீட்டி மடக்குவதே சிரமமாக இருந்தது. ஆயினும் கிரிக்கெட் விளையாட்டின் மேல் அவருக்கிருந்த உற்சாகம் உடற்பயிற்சி செய்ய வைத்துச் சிறந்த ஸ்பின் பௌலராக்கியது.

முன்னவர் பட்டோடி நவாப், பின்னவர், சந்திரசேகர் என்பது உங்களுக்கா தெரியாது?

ஆதாரம்: My favourite Sport Stories by Bill Stern

தொகுப்பு: கே. வி. முரளி




**மா**ர்ச் 6ந்தேதி அன்று இந்தியன் பாங்கின் எஸ்பிளனேட் கிளைக்குச் சென்றேன். என் நண்பர் ஒருவர் கொடுத்த ரூ.200க்கான செக்கைத் தந்து பணம் பெறவே போனேன். 12-20க்கு டோக்கன் தந்தனர். ஒரு மணி வரை காத்திருந்தேன். பணம் பட்டுவாடா நடக்கும் பகுதிக்கு செக் வந்து சேரவில்லை. கவுண்டரில் என் செக்கை வாங்கிக் கொண்டு டோக்கன் தந்த பெண்மணியிடம் விசாரித்தேன். பணம் தரலாம் என்று உத்தரவிடும் அதிகாரியை அவள் சுட்டிக் காட்டவே அவரிடம் போனேன். அவர் கூறியது என்னைத் திகைப்பில் ஆழ்த்தியது. ஒரு செக் 'பாஸ்' பண்ண நாற்பது நிமிஷங்கள் என்பது மிகவும் குறைந்த நேரம் என்றும், இன்னும் அதிகமாகவே நேரமாகும் என்றும் சொன்னார்!

தேசியமயமான பாங்குகள் திறம்படச் செயலாற்றும் என்று அரசு தமுக்கடித்தால் மட்டும் போதுமா?

சென்னை—24
8—3—72 என். நாராயணன்

**இ**ப்பொழுதெல்லாம் அகில இந்திய ரேடியோவில் நல்ல நல்ல கதா காலட்சேபங்களை ஒலிபரப்புகிறார்கள். பாராட்ட வேண்டிய விஷயம். ஆனால் 60.98 மீட்டரில் மட்டும் 8.45க்கே நிறுத்திவிடுகிறார்கள். 8.45க்கு இந்திச் செய்தியை ஒலிபரப்புகிறார்கள். 416.7 மீட்டரில் தொடர்ந்து கதாகாலட்சேபத்தை ஒலிபரப்புகிறார்கள். ஆனால் அந்த 'மீடியம் வேவ்' அலைவரிசையில் ஒலிபரப்பாகும் நிகழ்ச்சியை நீலகிரியில் உள்ள மக்களால் கேட்க முடிவதில்லை. காரணம் 5800 அடிக்கு மேல் உள்ளோம். 'ஷார்ட் வேவ்' மட்டும்தான் கேட்க முடியும். ஆகவே 60.98 மீட்டரில் தொடர்ந்து ஒலிபரப்புமாறு அகில இந்திய ரேடியோ இயக்குநருக்கு விண்ணப்பித்துக்கொண்டும் பயன் ஏதும் இல்லை.

குன்னூர், எம். பாரதி பரதன்
5—3—72 மற்றும் பத்து நண்பர்கள்

**கடந்த** பிப்ரவரி மாதம் 25ந் தேதியன்று, எங்கள் ரேடியோவுக்கு லைசென்ஸ் கட்ட என் அண்ணன் எங்கள் ஊரில் உள்ள தபால் நிலையத்துக்குச் சென்றார். அங்கு லைசென்சுக்கான ஸ்டாம்பு இல்லாததால் ஒரு வாரம் கழித்து வரச் சொன்னார்கள். அதன்படி பார்த்தால், மார்ச்சு மாதம் பிறந்து விடுகிறது. அபராதம் ஒரு ரூபாய் கூடுகின்றது. அரசாங்கத்தின் தவறுதலால் எங்களுக்கு ஒரு ரூபாய் நஷ்டம்.

திருநின்றவூர்,
7—3—72 எம். குணசுந்தரி

**ச**மீபத்தில் மதுரை தியாகராசர் பொறியியற் கல்லூரியில் உரையாற்ற வந்திருந்த திராவிட முன்னேற்றக் கழகப் பொருளாளர் திரு எம். ஜி. ஆர். அவர்கள் பேசுகையில் ''சற்றே வயதானவர்கள் மக்களுக்கு அறிவுரை என்று நாலு நல்ல வார்த்தைகள் கூற முன்வந்தால், 'கிழம் ஏதோ உளறுகிறது' என அலட்சியமாகக் கூறிவிட்டுச் செல்வோர் நிரம்பியிருக்கும் காலம் இது. அப்படியிருக்க மதிப்புக்குரியஇராஜாஜி அவர்களோ, எங்கோ ஒரு மூலையில் இருந்து கொண்டு எந்த வயதினரும், எந்த இனத்தவரும் மறுப்பின்றி ஏற்றுக் கொள்ளக் கூடிய அரிய கருத்துக்களை எளிய முறையில் வடித்துத் தருகிறார். அறிஞர் அண்ணா அடிக்கடி கூறி வந்தது போல 'மாற்றான் தோட்டத்து மல்லிகையும் மணம் நிறைந்தது' என்பதன் பிரத்யட்ச எடுத்துக்காட்டு திரு ராஜாஜி அவர்கள்தான். அவரின் அரிய கருத்துக்கள் எவருக்கும் எந்தத் தீமையும் செய்யாதவை என்பதோடு ஆட்சியில் இருக்கும் எங்களுக்கும் வழிகாட்டும் முறையிலும் அமைந்துள்ளது'' என்று பலவாறு ராஜாஜி அவர்களின் மேன்மையைப் புகழ்ந்து பேசியதோடு தம் கட்சியில் இருப்போர் சிலர் மதிப்புமிகு ராஜாஜி அவர்களை அவதூறாகப் பேசி வருவது தம் உள்ளத்தை மிகவும் புண்படுத்துகிறது என்றும் கூறினார்.

மாற்றுக் கட்சியினரையும் மகிழ்ந்துரைக்க வைத்த ராஜாஜியின் அருள் வடிவம் ஏற்கனவே அவரைப் போற்றி வரும் என்போன்றோரின் சிந்தையை மேலும் குளிர்விக்கிறது.

மதுரை—9
3—3—72 கே. வேதாந்தராமன்

**எ**ன்னிடம் இரண்டு நைந்துபோன பழைய பத்து ரூபாய் நோட்டுகளும், ஒரு ஐந்து ரூபாய் நோட்டும் இருந்தன. அவற்றைச் சென்ற மாதம் ரிசர்வ் பாங்கில் மாற்றுவதற்காகச் சென்றேன். அங்கு பழைய நோட்டுகளை மாற்றுவதற்காக நின்று கொண்டிருந்த கூட்டத்தைக் கண்டு மலைத்து நின்றேன். 'க்யூ'வில் நின்று பாங்கி ஊழியரை அடைந்ததும் அவர் கூறிய பதில் அதிர்ச்சியைக் கொடுத்தது. அந்த ரூபாய் நோட்டுக்களை மாற்றுவதற்கு நாலு மாத காலமாகுமாம். அப்பொழுது யாரோ ஒருவர் வந்து, தாம் அந்தப் பணத்தை மாற்றித் தருவதாகவும் அதற்குத் தரகுத் தொகையாக ரூபாய் இரண்டு வேண்டுமென்றும் கேட்டார். பலர் அவரிடம் பணத்தைக் கொடுத்து ரூபாய் இரண்டு போக மீதியைப் பெறுவதைப் பார்த்ததும் நானும் என்னுடைய பணத்தைக் கொடுத்து ரூபாய் இரண்டு போக மீதியைப் பெற்றுக் கொண்டேன். இவர்களுக்கு எப்படி பாங்கியில் அனுமதி அளித்துள்ளார்கள்? இத்தகைய தரகர்களுக்கும், பாங்கி ஊழியர்களுக்கும் சம்பந்தம் இருப்பதாகக் கூறுகிறார்கள். ரிசர்வ் பாங்கியில் மட்டுமல்லாமல், எல்லாப் பாங்கிகளிலும் பழைய நோட்டுக்களை வாங்குவதற்கு ஏற்பாடு செய்தால் இத்தகைய தரகர்களை நாட்டில் உலவ விடாமல் இருக்கலாம். மற்றும் காலத்தை வீணாக்காமல் மக்கள் பணத்தைப் பெற வசதி செய்ததாய் இருக்கும்.

சென்னை—7
4—3—72 இ. மோகன்



சென்னை ஆக்பா கேவர்ட் இந்தியா லிமிடெட், ஸ்தாபனத்தைச் சார்ந்த ஸ்ரீ K. குப்புசாமி அவர்கள் குமாரர்கள் சிரஞ்சீவி சூரியநாராயணனுக்கும் சிரஞ்சீவி நடராஜனுக்கும் 5-3-72ல் சென்னையில் உபநயன முகூர்த்தம் சிறப்பாக நடைபெற்றது. முகூர்த்தத்துக்கு நண்பர்களும், உறவினர்களும் வந்திருந்து சிறப்பித்தனர்.

முதல் அங்கத்தினராக எனது பெயரும் பிரஸ்தாபிக்கப்பட்டது.

அதை ஆதரித்துக் கையை உயர்த்திய ஆட்களில் எனது தோழனும் இருந்தான். சிறிது நேரத்துக்கு முன்பு என்னைக் கொலை செய்ய வந்து விட்டானோ என்று நான் சந்தேகப்பட்ட அதே தோழன்தான்.

கூட்டம் முடிந்தபிறகு அவனிடம் நான் பேசவேண்டும் என்று நினைத்தேன். ஆனால் அந்தக் கூட்டத்தில் அவன் எங்கே மறைந்து விட்டான் என்று தெரியவில்லை. இதுவரையில் அவனுடைய பெயரும் எனக்குத் தெரியாது. ஆனால் அந்த மனிதன் எனது வாழ்வின் மிகவும் ஆபத்தான கட்டத்தில் மனிதத்துவத்தின் மீது நான் வைத்திருந்த நம்பிக்கையை உறுதிப்படுத்தி விட்டான்.

எனது நினைவுகளின் அந்தகாரத்தில் இப்போதும் அந்தப் பெயர் தெரியாத ஆளின் பாத ஒலிகளைக் கேட்கிறேன். திரும்பிப் பார்க்கும்போதும் அதே குரல் ஒலிக்கிறது. ''நீங்கள் யார்? உங்கள் பெயர் என்ன?''

நானும் இப்போது சிறிதும் பயம் இன்றிக் கர்வமாகவே பதில் தருகிறேன்: ''அஹமத் அப்பாஸ் — குவாஜா அஹமத் அப்பாஸ்— ஐம்பத்தாறு ஆண்டுகளுக்கு முன்பு பானிபத்தில் பிறந்தேன். எனது முப்பாட்டனரான குவாஜா கல்தான் ஹுசேன் ஹாலி உருது மொழியில் மிகப் பெரிய கவிஞராம். அவர் தீட்டிய ''முசத்தஸே ஹாலி'' என்னும் பெருங் காவியத்தின் மூந்நூறு பதிப்புகள் வந்திருக்கின்றன. ஆனால் அவர் தமக்காகவோ, தமது குழந்தைச் செல்வங்களுக்காகவோ அதன் வருமானத்தை வைத்துச் செல்லவில்லை. ஏனெனில் மக்களைத் தட்டி எழுப்புவதற்காக அவர் அந்தக் காவியத்தை இயற்றினார். சம்பாதிக்கும் நோக்கத்துடன் எழுதவில்லை. எனது தகப்பனாரான குவாஜா குலாமுஸ் ஸப்தைன் ''எப்போதும் உண்மையே பேச வேண்டும்; எவர் முன்பும் தலை குனியலாகாது'' என்று போதித்தார் — ஒரு முறை ஒரு வேலைக்காரனை நான் இட்டிவிட்டேன். அவர் என்னை ஓர் இருட்டறையில் பூட்டி விட்டார். பன்னிரண்டு மணி நேரம் வரை எனக்கு உணவும் நீரும் கொடுக்கவில்லை. அந்த வேலைக்காரனிடம் மன்னிப்புக் கேட்ட பிறகே எனக்கு விடுதலை கிடைத்தது. ''எல்லோரும் சரிசமமானவர்கள்; உயர்வு—தாழ்வு கூடாது'' என்ற கொள்கையை அவர் கடைப்பிடித்தார். எனக்காக அவர் எந்தச் சொத்தையும் வைக்கவில்லை. மனிதத்துவத்தின் விதிகளையே போதித்தவர் அவர். எனது அன்னையாரான முசவ்வரத்துன்னிசா பேகம் எந்தக் கல்லூரியிலும் கல்வியறிவு பெறவில்லை; எந்த அரசியல் கட்சியிலும் பங்கு கொள்ளவில்லை என்றாலும் கடைசி நேரம் வரை வகுப்புவாத உணர்ச்சிகளை வெறுத்தவர். வகுப்புக் கலவரங்கள் நடந்த நாட்களிலும் மனிதத்துவத்தின்மீது அவர் வைத்திருந்த நம்பிக்கையை இழக்கவில்லை. நான் இந்த நாட்டின் மைந்தனுவேன். எனது உறவினர்கள் பாகிஸ்தானில் இருக்கிறார்கள். ஆனால் மனிதாபிமானம் — சோஷலிஸம் தொடர்பில் எனது உறவினர்கள் உலகம் முழுதும் இருக்கிறார்கள். அமெரிக்காவிலும், ரஷ்யாவிலும்—



இங்கிலாந்திலும் — சீனாவிலும் — ஜப்பானிலும் எல்லா நாடுகளிலும் பரந்து இருக்கிறார்கள். உலகில் நிகழும் சம்பவங்கள் என்மீதும் (ஒவ்வொரு மனிதன் மீதும்) விளைவுகளை உண்டாக்கிச் செல்கின்றன. இதையே ஐரோப்பியக் கவிஞர் ஜான்டோனும் சொல்லியிருக்கிறார்.''

**''எந்த மனிதனும் தீவு அல்ல—**

**ஒவ்வொரு மனிதனும் சமுத்திரத்தின் ஒரு துளியானவன்.**

**ஒவ்வொரு மனிதனும் பூமியின் அணுவாவான்.**

**ஏனெனில் நானும், மனிதத்துவமும் தனித்தனியானது அல்ல.''**

இதைச் சொல்லிவிட்டு அவன் மௌனமாகி விட்டான். ''முழு மானிடத்துவமும் உன்னுள் அடங்கி யிருக்கிறது என்பதில் ஐயமில்லை'' என்று நான் கூறினேன்.

''ஆனால் மற்றவர்களைக் காட்டிலும் உன் மேல் என் உரிமை அதிகமாக இருக்கிறது என்பதை மறந்து விடாதே. என்னை விட்டு நீ உன்னைப் பிரித்து விட்டால், நீ லட்சக்கணக்கான மக்களில் தனித்து நின்று விடுவாய். மனிதத்துவம் சிறப்பானது; உயர்வானது; ஆனால் ஒவ்வொரு மனிதனுக்கும் 'சுயம்' ஒன்று இருக்கிறது. இதே 'சுய'த்தில் இறைவனும் இருப்பதாகச் சொல்கிறார்கள். ஒன்றைமட்டும் நீ ஒப்புக் கொள்வாய். அதாவது மனிதனில் 'சுயம்' இருக்கிறான். அந்தச் சுயத்தில் மனிதன் இருக்கிறான். அதாவது உன்னுள் நான் இருக்கிறேன். என்னுள் 'நீ' இருக்கிறாய்!''

இதைச் சொல்லி அவன் என் கண்களை நோக்கினான். பிறகு 'அவன்' எனது பார்வையின் கண்ணாடிக்குள் மறைந்து விட்டான். ''நானும்'', ''அவனும்'' என்றும் தனியாகவே இருந்ததில்லை என்ற உணர்வும் ஏற்பட்டது!

# சஸ்பென்ஸ் மாப்பிள்ளை!

கோமதி ஸ்வாமிநாதன்

நண்பர் கொடுத்திருந்த 'புதுமனை புகு விழா' அழைப்பிதழை ராமமூர்த்தி திரும்பத் திரும்பப் படித்துப் பார்த்தார். மேற்கு மாம் பலத்தில் சீநிவாசய்யங்கார் தெரு என்று அந்த அழைப்பிதழில் குறிக்கப்பட்டிருந்தது. மேற்கு மாம்பலம் ராமமூர்த்திக்கு நன்கு அறிமுகமான இடம் இல்லை.

தியாகராய நகர் பஸ் ஸ்டாண்டுப் பக்கம் விசாரித்தபோது, நேராக, மேற்கே, ரயில்வே லெவல் கிராஸைத் தாண்டிப் போய், கோதண்ட ராமசாமி கோயில் தெருவைக் கண்டு பிடித்து அதற்குப் பின்னால் போக வேண்டும் என்று தெரிந்து கொண்டார். கோதண்ட ராமசாமி கோயில் தெரு ஆரம் பத்துக்கும் போய் விட்டார். அங்கே ஒரு மறு விசாரணை துவங்க வேண்டும் என்று நினைத்த போது எதிர்பாராதவிதமாக அவர் காரியா லய நண்பர் பரமானந்தத்தைப் பார்த்தார். அவரும் புதுமனை புகு விழாவுக்குத்தான் போய்க் கொண்டிருந்தார். பரமானந்தமும் தாம் ஏறி வந்த சைக்கிளைத் தள்ளிக் கொண்டு ராமமூர்த்தியுடன் கோதண்ட ராமசாமி கோயில் தெரு நெடுக நடக்க ஆரம்பித்தார்.

இங்குமங்கும் அலைந்தார்களே தவிர சீநிவாச அய்யங்கார் தெருவைக் கண்டு பிடிக்க முடிய வில்லை. விசாரித்தபோது ஒவ்வொருவரும் ஒன்று சொன்னார்கள். குழப்பம் மேலிட்டது. அலைச்சலும் அதிகரித்தது. பலன் பூஜ்யம் தான். பகல் மணி பதினொன்றரை. கடும் வெய்யில். "இதோ பாரு, பரமானந்தம்! மறுபடியும் அந்தக் கடைசிக்குப் போய்க் கேட் டால் அங்கே இருப்பவர் இங்கேயே வரச் சொன்னாலும் சொல்லுவார். நான் இந்த வீட் டுத் திண்ணையிலே கொஞ்சம் சிரமபரிகாரம் பண்ணிக்கறேன். நீ சைக்கிளிலே போய், பாலகிருஷ்ணனின் புது வீட்டை நிச்சயமாய்க் கண்டு பிடித்துவிட்டு என்னிடம் வந்து சொல்! அப்புறம் கிளம்புகிறேன்" என்று கூறிவிட்டு ராமமூர்த்தி எதிர்த்தாற்போல் இருந்த எழுபத்தி ஏழாம் நம்பர் வீட்டுத் திண்ணையில் போய் உட்கார்ந்துவிட்டார்.

நடந்த சிரமத்தினால் சில நிமிஷங்கள் கண் அயர்ந்துவிட்டார் என்றுகூடச் சொல்லலாம். "சார்! சார்!" என்ற குரல் கேட்டுத் திடுக் கிட்டு விழித்தார். பரமானந்தம் இல்லை. வீட்டின் நிலைவாசலை ஒட்டி ஓர் இளைஞன் தான் நின்று கொண்டிருந்தான். ராம மூர்த்தி கண்களைக் கசக்கிக் கொண்டார். களை யான முகம்.

"சார் முகத்தில் ரொம்ப களைப்பு இருக்கு! கொஞ்சம் மோர் கொண்டு வரவா?" என்று உபசரித்தான் அந்த இளைஞன்.

ராமமூர்த்திக்குத் தாகமாகத்தான் இருந் தது. ஆனால் முன்பின் தெரியாத இடத்தில் மோர் கேட்டு வாங்கிக் குடித்துச் சிரமம் கொடுக்க அவர் விரும்பவில்லை. "தாங்ஸ்! வெய்யில் ஜாஸ்தி! கொஞ்சம் தண்ணீர் மாத் திரம் கொடுங்கள்" என்றார். இரண்டாவது நிமிடத்தில் ஓர் எவர்சில்வர் செம்பில் தண் ணீர் வந்தது.

ராமமூர்த்தி நன்றி தெரிவிக்க வாய் அசைப்பதற்கு முன்பேயே அந்த இளைஞன் பேச ஆரம்பித்துவிட்டான். "நீங்க ரெவினியூ போர்டுலே வேலை செய்யற மிஸ்டர் ராம மூர்த்திதானே? திருவல்லிக்கேணி பெரிய தெரு....." என்றான். "ஆமாம்! நீங்க.." என்று இழுத்தார் ராமமூர்த்தி.

"உங்களுக்குப் பக்கத்து வீட்டிலே இருக் கிற ஒரு சிநேகிதனைப் பார்க்க அடிக்கடி வரு வேன். அவன் உங்களை ஒரு நாள் சுட்டிக் காட்டி இன்னாரென்று சொன்னான். உங்க பெண்ணுக்கு வரன் பார்த்துக் கொண்டிருக் கிறீர்கள் என்று கேள்விப்பட்டேனே? ஏதா வது குதிர்ந்ததா?" என்றான் இதமாக.

பக்கத்து வீட்டுப் பையன் யார் என்று யோசிக்க ஆரம்பித்தவர் அடுத்து வந்த கேள்விகளில் அந்த நினைவையே மறந்துவிட் டார். "இன்னும் இல்லையே, சார்! அலைந்து கொண்டுதான் இருக்கிறேன்! நல்ல இடமாக இருந்தால் சொல்லுங்களேன்" என்று சமீப காலமாகத் தாம் சொல்லிச் சொல்லிப் பழகி யிருந்த பல்லவியை ஆரம்பித்துவிட்டார்.

இளைஞன் சில விநாடிகள் யோசித்தவாறு நின்றான். "ஒரு பையன் இருக்கிறான். நல்ல



பையன். நல்ல உத்தியோகம். இங்கே பட்ட ணத்தில்தான் இருக்கிறான். ஆனால் அவன் பெற்றோர் திருநெல்வேலியில் இருக்கிறார்கள். நீங்கள் அவர்களைப் போய்ப் பார்த்துப் பேச வேண்டும். திருநெல்வேலிக்குப் போக முடி யுமா?" என்றான்.

ராமமூர்த்தி முகவாய்க் கட்டையைத் தடவிக் கொண்டார். "முதலில் பையனைப் பார்த்து ஒரு 'ஐடியா ஃபாரம்' பண்ணிக் கொண்டு விடுகிறேன். அப்புறம் அவசிய மானால் திருநெல்வேலிக்குக் கடிதம் எழுது கிறேன்" என்றார்.

இளைஞன் சிரித்தான். "நீங்க ரொம்ப சிக்கனப் புள்ளியாக இருப்பீர்கள்போலிருக் கிறதே? உட்கார்ந்த இடத்திலிருந்தே கல் யாணத்தை முடித்துவிட முடியுமா? நானு

இடம் அலைந்தால்தான் சுவாரசியம்'' என்றான்.

ராமமூர்த்திக்கு என்னவோபோல் இருந்தது. ''பையன் கண்ணுக்கும் மனத்துக்கும் திருப்தியாக இருந்தால்தானே மேற்கொண்டு உற்சாகமாக நடவடிக்கை எடுக்க முடியும்?''

''வாஸ்தவம்தான். பையன் ஏறத்தாழ என்னைப் போலவே இருப்பான்! இன்னொரு விஷயம். அவனுடைய அப்பா கொஞ்சம் பழங்காலத்து மனிதர். பிள்ளையைப் பார்த்துப் பேசிவிட்டு அவரிடம் வருவதை விரும்பாதவர். தம் மூலமாகவே எந்தக் காரியமும் நடக்க வேண்டும் என்ற ஆசை. இந்த இரகசியம் எனக்குத் தெரியும். அதற்கு மேல் உங்கள் உசிதம். திருநெல்வேலி விலாசம் வேண்டுமானால் நான் தருகிறேன்.''

இந்த இளைஞன் கண்ணுக்கும் மனத்துக்கும் லட்சணமாகவே இருந்தான். இவனைப்போல் ஒரு பையன் என்றால் கிடைக்கக் கொடுத்து வைக்க வேண்டுமே! ''உங்களுக்கு அந்தத் திருநெல்வேலிக்காரர் உறவா?'' என்றும் ஒரு கேள்வியைப் போட்டார்.

''ஆமாம்! தூரத்து உறவுதான்'' என்று சொல்லிக் கொண்டே அந்தப் பையன் உள்ளே போய் ஒரு காகிதத் துண்டில் திருநெல்வேலி விலாசத்தை எழுதிக்கொண்டு வரவும், வாசலில் பரமானந்தம் சைக்கிளில் வந்து இறங்கவும் சரியாக இருந்தது.

''சார்! கண்டு பிடிச்சுட்டேன்! உங்களை முதன் முதலில் பார்த்த இடத்துக்கு வெகு சமீபம்! கிளம்புங்க'' என்றார் பரமானந்தம்.




அந்த இளைஞனின் பெயரைக்கூடக் கேட்டுக் கொள்ளாமல் ராமமூர்த்தி பரமானந்தத்துடன் கிளம்பினார். பாலகிருஷ்ணன் வீட்டுப் புதுமனை விழா முடிந்து இரண்டு பந்தி சாப்பாடுகூட நடந்துவிட்டிருந்தது. ரசமும் சாம்பாரும் கங்கை, காவேரி வெள்ளமாகப் பெருகி யிருந்ததைக்கூடப் பொருட்படுத்தாமல் சாப்பிட்டுவிட்டு வீட்டுக்குத் திரும்பினார் ராமமூர்த்தி. பாலகிருஷ்ணனின் புது வீட்டைத் தேடி அலைந்த சிரமத்தையெல்லாம்கூட, ஒரு புது தகவல் கிடைத்த ஆனந்தத்தில் மறந்துவிட்டார். ராமமூர்த்தி உடனேயே ஒரு கடிதம் எழுதி அன்று இரவிலேயே 'மொபைல்' போஸ்ட் ஆபீஸில் சேர்த்து விட்டார்.

ராமமூர்த்திக்கு மறுபடியும் மேற்கு மாம்பலம் கோதண்டராமசாமி கோயில்தெருவுக்குப் போய் விலாசம் கொடுத்த இளைஞனைச் சந்தித்து மேற்கொண்டு மாப்பிள்ளைப் பையனைப் பற்றி விசாரிக்க வேண்டும் என்ற ஆசை. ஆனால் அடுத்த ஒரு வாரத்தில் அவருக்கு அவகாசமே கிடைக்கவில்லை. அதற்குள் திருநெல்வேலி சபாபதி பதில் எழுதிவிட்டார். சபாபதியும் அவர் மனைவியும் இன்னும் பத்து தினங்களில் திருப்பதி போகும் வழியில் சென்னைக்கு வரப் போவதாகவும், கோதண்டராமசாமி கோயில் தெரு எழுபத்து ஏழாம் நம்பரில் தங்கப் போவதாகவும், ஒரு குறிப்பிட்ட நாள் காலை பத்து மணி அளவில் திருமணம் சம்பந்தமாக நேரில் வந்து பேசிக்கொள்ளலாம் என்றும் அந்தப் பதிலில் கண்டிருந்தது.

குறிப்பிட்ட நாளில் சரியான நேரத்தில் ராமமூர்த்தி கே. ஆர். கோயில் தெரு முனைக்கு ரயில்வே லெவல் கிராஸ் தாண்டி வந்த போது விலாசம் கொடுத்த இளைஞன் ஒரு கையில் சைக்கிளைப்பிடித்துக் கொண்டு யாருடனோ பேசிக் கொண்டிருந்தான். ராமமூர்த்தியைப் பார்த்ததும் ஒதுங்கி வந்து, ''சார்! நீங்கள் திருநெல்வேலிக்குப் போயிருந்தீர்களோ இல்லையோ தெரியாது. அவரே இங்கே வந்திருக்கிறார். எழுபத்தி ஏழாம் நம்பர். போய்ப் பாருங்கள். தம் விலாசம் எப்படிக் கிடைத்தது என்று அவர் கேட்டால் நான் கொடுத்ததாக அவருக்குத் தெரியவேண்டாம். ஒரு மாதிரி முசுடு! இப்பத்தான் முதல் தடவையாக இங்கே வர மாதிரி பேசுங்களேன்! ஏதோ என்னாலான உதவியைச் செய்தேன்! நான் வருகிறேன்'' என்று எதிர்ப் பக்கமாகப் போய் விட்டான்.

திருநெல்வேலி சபாபதி நல்லவராகவே இருந்தார். தம் பையனைப் பற்றிய தகவல்களைக் கொடுத்தார். ராமமூர்த்திக்குத் திருப்தியாகவே இருந்தது. ராமமூர்த்தியும் தம் பெண் படித்து முடித்து உத்தியோகம் பார்ப்பதைச் சொல்லி அவள் குணாதிசயங்களையும் வருணித்தார். லௌகிக விஷயங்களும் அடிபட்

டன. அதில் ஒன்றும் சிக்கல் இல்லை. மறுநாள் மாலையே சபாபதி தம் மனைவியையும் பையனையும் அழைத்துக் கொண்டு பெண் பார்க்க வருவதாக ஒப்புக்கொண்டார். பையனுக்குப் பெண்ணைப் பிடித்துவிட்டால் முகூர்த்தம் வைத்துவிடலாம் என்ற அளவுக்குப் பேச்சில் உறுதி ஏற்பட்டது. இடையே, ''பையன் எங்கேயாவது அறை எடுத்துத் தங்கியிருக்கிறானா?'' என்ற ராமமூர்த்தியின் கேள்விக்கு, ''அதெல்லாம் இல்லை'' என்ற பதிலுக்கு மேலாகச் சபாபதி ஒன்றும் சொல்லவில்லை.

மறுநாள் மாலை. வாசலில் டாக்ஸி வந்து நின்றது. சபாபதி தம்பதியுடன் மற்றொரு முதிய ஜோடியும் வந்தார்கள். அவர்களை ராமமூர்த்தி வரவேற்று உபசரித்தபடியே வாசல் பக்கம் பார்த்தார். டாக்ஸிக்காரருக்குப் பணம் கொடுத்துக் கொண்டிருந்தான், அவருக்கு விலாசம் குறித்துக் கொடுத்த இளைஞன். 'அது சரி, மாப்பிள்ளைப் பையன் எங்கே?' என்ற கேள்வி ராமமூர்த்தியின் உள்ளத்தில் உருவாகும் சமயம் கடைசியாக உள்ளே நுழைந்த அந்த இளைஞன் மற்றவர்களுக்குத் தெரியாமல் ராமமூர்த்தி மட்டும் பார்க்கும் வகையில் உதட்டில் விரலை வைத்து சமிக்ஞை செய்தான். ராமமூர்த்திக்கு ஏதோ புரிவது போல் தோன்றியது. கொஞ்சநஞ்சமிருந்த சந்தேகத்தையும் அடுத்தாற்போல் நடந்த சம்பாஷணை போக்கிவிட்டது.

''ஏண்டா, சுந்தரம்! டாக்ஸிக்காரனை அனுப்பிவிட்டாயா ?'' என்றார் சபாபதி அந்த இளைஞனைப் பார்த்து. ''ஆமாம், அப்பா !'' என்றான் அந்த இளைஞன். ராமமூர்த்தி தமக்குள் சிரித்துக் கொண்டார். சுந்தரம் என்று அழைக்கப்பட்ட அந்த இளைஞனின் நடிப்புத் திறமையையும் பெற்றோர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துவிட்டுப் பின்னால் ஒதுங்கி நிற்கும் சாமர்த்தியத்தையும் புரிந்து கொண்டார். அவனை அப்போதுதான் முதல் தடவையாகப் பார்ப்பது போல் தாமும் நடிக்க ஆரம்பித்தார்.

ராமமூர்த்தியின் பெண் சரோஜா நல்ல அழகி. ஆகவே பெண் பார்க்கும் சம்பிரதாயம் சுமுகமாக நடந்தது. சபாபதியின் குடும்பத்துக்குத் திருப்தி. வாய் நிறையச் சொல்லிவிட்டார்கள். சபாபதியின் மனைவி மாத்திரம் சரோஜாவை அருகில் அழைத்து, ''குழந்தை! மூக்குக் குத்திக் கொள்ளாமல் இருப்பது இந்தக் காலத்து பாஷன் போலே இருக்கு ! நாங்க கொஞ்சம் பழங் காலம். கல்யாணத்துக்கு முன்னாலே வலது மூக்கை மாத்திரமாவது குத்திக் கொண்டு பளிச்சென்று ஒரு மூக்குத்தி வாங்கிப் போட்டுக் கொள்'' என்று சொல்லிவிட்டுத்தான் கிளம்பினாள்.

எல்லோரையும் திரும்பி வழியனுப்ப ஏற்பாடு செய்தபோது ராமமூர்த்தியும் சுந்தரமும் ஒரு நிமிடம் ரேழியில் தனியாகச் சந்தித்துக் கொள்ள நேரிட்டது. ''மாப்பிள்ளை ! நீங்க மகாசூரர் ! சஸ்பென்சைக் கடைசிவரை நிலைநிறுத்திவிட்டீர்களே. நீங்கள் யாரோ வெளிநபர் என்றல்லவா ஏமாந்துபோனேன்'' என்றார் ராமமூர்த்தி. ''உஷ்! அதனால்தான் உங்களுக்கு வெற்றி ; எனக்கும் மகிழ்ச்சி ! நான் இதில் அக்கறை காட்டினேன் என்று தெரிந்தால் என் அப்பாவுக்கு ஏதாவது சந்தேகம் வரும். சந்தேகம் வந்தால் காரியம் நடக்காது. உங்கள் பெண்ணை ஒரு சந்தர்ப்பத்தில் பார்த்திருக்கிறேன். மனசைப் பறிகொடுத்துட்டேன். அப்புறம் உங்களைப் பற்றியும் தெரிந்து கொண்டேன். உங்களிடம் திருநெல்வேலி தகவலை எப்படியாவது சேர்க்க வேண்டும் என்று தவித்துக் கொண்டிருந்த போது அகஸ்மாத்தாக நீங்கள் என் அத்தை வீட்டுத் திண்ணையில் வந்து உட்கார்ந்தீர்கள். நான் யாரோ மாதிரி ஒதுங்கி நின்றேன். அப்பாவுக்கு இப்போது பரம திருப்தி'' என்றான் சுந்தரம்.

நாட்கள் ஓடின. முகூர்த்தம் வைத்துக் கல்யாண மண்டபம் ஏற்பாடாகிவிட்டது. அழைப்பிதழ்கள் அனுப்பப்பட்டுவிட்டன. சரோஜா மாத்திரம் இன்னும் மூக்குக் குத்திக் கொள்ளவில்லை. ராமமூர்த்தி வற்புறுத்தினபோது, ''போங்கப்பா ! இதையெல்லாம் அந்த மாமி மறந்திருப்பாள். மேலும் ஆபீஸ் போற பெண் கர்நாடகமாக மூக்குக் குத்திக் கொள்வதெல்லாம் நன்றாயிருக்காது. ரொம்ப வற்புறுத்தினால், 'அடுத்த மாதம் பார்த்துக்கொள்ளலாம்' என்று கூறிச் சமாளியுங்கள்'' என்று ஓங்கி அடித்துவிட்டாள் சரோஜா.

கல்யாணத்துக்கு முதல் நாள். சபாபதி குடும்பமும் அவர்கள் உறவினர்களும் கல்யாண மண்டபத்தில் வந்து இறங்கிவிட்டார்கள். சிறிது நேரத்துக்கெல்லாம் சபாபதியின் மனைவியும் இன்னொரு அம்மாளும் பெண் வீட்டாரைப் பார்க்க மாடியிலிருந்து கீழே வந்தார்கள். ''சரோஜாவைக் கூப்பிடுங்கோ'' என்றாள் சபாபதியின் மனைவி.

சரோஜா வந்து மாமியாரை நமஸ்கரித்து எழுந்தாள். ''ஏனம்மா, சரோ ! நீ இன்னும் மூக்குக் குத்திக் கொள்ளவில்லையா?... உன் அப்பாகிட்டே சொல்லு. உன் மூக்கிலே மூக்குத்தி ஏறின பிறகுதான் என் பிள்ளை உன் கழுத்தில் தாலியைக் கட்டுவான் என்று''. சபாபதியின் மனைவி கோபத்துடன் மாடிக்குப் போய்விட்டாள். சரோஜா அம்மா மடியில் படுத்து விசும்பினாள். ''என் அழகே போய் விடும்'' என்று கூறி அழுதாள்.

இடையே ராமமூர்த்தி, மாப்பிள்ளை சுந்தரத்தைப் பார்த்து நிலைமையை எப்படியாவது சமாளிக்க முடியுமாவென்று கேட்டார். ''என்னால் விலாசம்தான் கொடுக்க முடியும். வேறு ஒன்றும் செய்ய இயலாது. அன்றைக்குத் திருநெல்வேலி விலாசம் தந்தேன். இப்போது உஸ்மான் ரோட்டிலுள்ள ஒரு நகைக் கடை விலாசம் தருகிறேன். அங்கே கொக்கெயின் ஊசி போட்டு வலிக்காமல் மூக்குக் குத்திவிடுகிறார்களாம்'' என்று சொன்னான் சுந்தரம். ''டேய் ! ஒரு டாக்ஸி கொண்டாடா '' என்று மகனைப் பார்த்துக் கூவிக் கொண்டே ராமமூர்த்தி நகர்ந்தார்.

மறுநாள் கெட்டி மேள கோஷத்துடன் சரோஜாவின் கழுத்தில் தாலி முடியப்பட்டபோது மூக்குத்தி அவள் முகத்துக்கே பளபளப்பு அளித்துக் கொண்டிருந்தது.

[சம்பவங்கள் உண்மை; பெயர்கள் மட்டும் மாற்றப்பட்டுள்ளன.]



அன்று கடற்கரையில் தனியாக அமர்ந்திருந்தேன். ஒரு தினுசான கனைப்புச் சத்தம் கேட்டுத் திரும்பினேன்.

ஒரு பெண்...

மங்கலான ஒளியில் அவளைப் பார்த்ததும் எனக்கு வியப்பு...

''நீங்கள்... நீ... கருணாதானே?'' என்றேன்.

'' அடேயப்பா.... இவ்வளவு நேரமாயிற்று.... நானேதான் !'' என்றாள், அவள் சிரித்துக் கொண்டு. என் அருகில் அமர்ந்தாள்.

''ஊரிலிருந்து எப்போது வந்தாய்? எங்கே தங்கியிருக்கிறாய்... இங்கே யாருடன் வந்தாய் ?''

'' ஒவ்வொரு கேள்வியாகத்தான் கேளுங்களேன். ஊரிலிருந்து வந்து ஒரு மாதமாயிற்று. இங்கே வேலையில் இருக்கிறேன். உங்களை எதிர்பாராதவிதமாக இங்கே சந்தித்தேன். அவ்வளவுதான்.'' என் மனத்தில் திருப்தி பரவியது. நல்ல வேளையாக அவள் என்னைத் தேடிக் கொண்டு வரவில்லை.

'' எங்கே தங்கி இருக்கிறாய், கருணா ?''

அவள் பெண்கள் தங்கியிருக்கும் விடுதி ஒன்றின் பெயரைச் சொன்னாள்.

''ஊரில் எல்லாரும் நலந்தானே ?''

''என்ன கேடு... எல்லாம் நன்றாகத்தான் இருக்கிறார்கள்......''

'' ஏன் இந்த வீண் சலிப்பு கருணா ?''

''பிறகென்ன ஒரு பெண் தனியாக வேலை பார்க்க வெளியூர் செல்லக்கூடாதென்றால்?''

அவள் கோபத்துக்குக் காரணம் எனக்குப் புரிந்தது. கருணா எங்கள் ஊரைச் சேர்ந்தவள். ஒரே தெரு. எனக்கு மிகப் பழைய அறிமுகம். எதைப் பற்றியெல்லாமோ சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தோம். அவள் வீட்டுப் பசுமாட்டின் கன்றுகூட, எப்படியிருக்கிறது இப்போது என்று விசாரித்துவிட்டேன். திடுமென அவள் ஒரு கேள்வியைக் கேட்டாள்.

''உங்கள் அறை எங்கே இருக்கிறது?''

எனக்குத் திக்கென்றது.

''என் அறைக்கு நீ வர முடியாது கருணா. என்னுடன் இரு நண்பர்கள் இருக்கிறார்கள்.'' பெண்களிடம் பொய் பேசித்தான் எனக்குப் பழக்கம்.

'' உங்களுடன் சந்தோஷமாகப் பொழுதைக் கழித்து எவ்வளவோ நாட்கள் ஆகிவிட்டனவே..... எங்கே போகலாம்.....?'' அவளாகக் கேட்டாள்.

அவள் கேட்ட கேள்வியும், அவள் அமர்ந்திருந்த தோரணையும் எனக்குப் போதையை ஊட்டின. தேடிப் போகாமல் இன்று ஒரு காதலி வலுவில் கிடைத்தால் வேண்டாம் என்று ஒதுக்க நான் என்ன முட்டாளா ?

''எங்கே வேண்டுமானாலும் போகலாம். ஆனால் உன் ஹாஸ்டலில் யாரும் உன்னைத் தேடமாட்டார்களா ?''

அவள் அலட்சியமாகப் பதில் சொன்னாள்.

''எனக்கு நானே எஜமானி! என்னை யாரும் தேடமாட்டார்கள்! எல்லோரும் என்னைப் போலத்தான்.''

என் மனத்தில் நம்பிக்கை ஊறியது. இவள் மூலமாக இவளது சிநேகிதிகளிடமும் பழகலாம் !

''இன்னுமென்ன யோசனை? போகலாமா?''

அவள் எழுந்துவிட்டாள். நானும் எழ வேண்டியதாயிற்று. ஒரு காலத்தில் என்னையே திருமணம் செய்து கொள்ள வேண்டும்



ரா. வேங்கடசாமி

என்று ஒற்றைக் காலில் நின்றவள். இன்று இந்த அளவுக்கு முன்னேறி இருக்கிறாள்.

பட்டணத்து வாசம் அவளை இவ்வளவு தூரத்துக்கு மாற்றி விட்டது போலும். முன்பை விட இப்போது அவளுக்கு அழகு கொஞ்சம் கூடி யிருந்தது. நாகரிக உடை அவளுக்கு மிகவும் எடுப்பாகத் தெரிந்தது. அவளை அழைத்துக் கொண்டு நடப்பதிலேயே நான் பெருமையடைந்தேன்.

மனத்தில் ஓர் உறுத்தல்.....

இவளை மணந்து கொள்ளாததினால் நான் தவறு செய்து விட்டேனா?

இவளை என்ன, யாரையுமே திருமணம் செய்து கொள்ளக் கூடாது என்று முடிவு செய்திருப்பவனாயிற்றே நான். ஒருத்தியிடம் சிக்கி விட்டால்....

இப்படிப்பட்ட அழகிகளின் தொடர்பு தொடர்ந்து கிடைக்குமா? நான் சுதந்திரப் பறவை. கைநிறையச் சம்பாதிக்கிறேன். இந்தச் சுகத்தில் தவறு என்ன இருக்கிறது? என் தாய்க்கு மட்டும் ஒரு குறை, நான் பிரம்மச்சாரியாகவே இருக்கிறேனென்று! இருவரும் பெரிய ஹோட்டல் ஒன்றுக்குப் போனோம். திருப்தியாகச் சாப்பிட்டோம்.

நான் மறுத்துக் கூறிய போதும், பில்லுக்கு அவளே பணத்தைக் கொடுத்தாள். அவள் வசதி என்னைப் பிரமிக்க வைத்தது.

அதே ஹோட்டலில் அறை எடுத்துக் கொள்ளலாம் என்று நான் கூறியதை மட்டும் அவள் நிராகரித்து விட்டாள்.

''ஒரு இரவுக்காக இவ்வளவு பணம் தரவேண்டுமா? வாருங்கள், சிறிய ஹோட்டல் ஒன்றுக்குப் போவோம்.'' பேசவில்லை நான். பின்தொடர்ந்தேன்.

என்னை அறியாமல், அவள் சொன்னதற்கெல்லாம் தலையை ஆட்டிக் கொண்டிருந்தேன் போலிருக்கிறது. எனக்கு உள்ளூற பயம் வேறு, நான் வழக்கமாகப் போகும் ஹோட்டலுக்கு என்னை அழைத்துக் கொண்டு போய்விடப் போகிறாளோ என்று!

நல்ல வேளையாக அப்படி ஏதும் நடக்கவில்லை. அவள் அழைத்துப் போன ஹோட்டல் மிகவும் சாதாரணமாக இருந்தது. அங்கே உட்கார்ந்திருந்த வாலிபன், அவள் கேட்கும் முன்னமே சாவியை எடுத்துக் கொடுத்தான். இருவரும் இலேசாகச் சிரித்துக் கொண்டார்கள். அதைக் கவனிக்க எனக்கு எப்படியோ இருந்தது. காரணமில்லாத பொறாமை அந்த வாலிபன் மீது...

பையன் கொடுத்த சாவியை வாங்கிக் கொண்டு கருணை மேலே நடந்தாள். வாலிபன் ஹோட்டல் ரிஜிஸ்தரை என் பக்கம் நகர்த்தினான்.

வழக்கம்போல் பொய்யான பெயர், பொய்யான விலாசம் எல்லாவற்றையும் எழுதினேன். பணத்தையும் கொடுத்தேன்.

''ரூம் நெம்பர் பத்து....'' என்றான் அவன். நடந்ததையெல்லாம் பார்க்கும்போது கருணை இங்கே அடிக்கடி வருவாள்



போலவே எனக்குத் தோன்றியது. அந்த எண்ணம் என் மனத்தில் கசப்பை ஏற்படுத்தியது.

எதற்கும் இதைப் பற்றி முதலில் சுகுணாவிடம் கேட்டுவிட்டுத்தான் வேறு வேலை என்று நினைத்துக் கொண்டு, அவள் இருந்த பத்தாம் நெம்பர் அறைக்குப் போனேன். அவள் கட்டிலில் சாய்ந்திருந்தாள். நான் நாற்காலியில் அமர்ந்தேன். அவள் எழுந்து உட்கார்ந்தாள்.

''ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்? உடம்பு சுகமில்லையா?'' என்று அவள் கேட்டாள்.

''இல்லை.... எனக்கு ஒரு சந்தேகம்.....''

''என்ன....? கேளுங்கள்... சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள வேண்டியதுதான்.''

''கீழே இருந்த வாலிபன் உன்னைப் பார்த்துச் சிரித்தானே, அவனை உனக்கு முன்பே தெரியுமா?''

''நிச்சயமாகத் தெரியாது.... அவன் சிரித்தானே என்பதற்காக நானும் சிரித்து வைத்தேன்.......''

''இந்த ஹோட்டல் உனக்குப் பழக்கமானதா?''

''நல்ல சந்தேகம் உங்களுக்கு. தொந்தரவில்லாமல் இங்கே அறை கிடைக்கும் என்று எங்கள் ஹாஸ்டலில் பேசிக் கொண்டார்கள். அவ்வளவுதான்.....'' எனக்கு இந்த விளக்கம் திருப்தியாக இருந்தது. அதனால் அதற்கு மேல் கேள்வி கேட்டு அவளைத் தொந்தரவு செய்ய விரும்பவில்லை. நான் நிறுத்தியவுடன் அவள் கேள்வி கேட்க ஆரம்பித்து விட்டாள்.

''நீங்கள் இன்னமும் திருமணம் செய்து கொள்ளவில்லையா?'' இது என்னால் எதிர்பார்க்கப்படாத கேள்வி.

''திருமணமா? எனக்கா....? எனக்கு அதுதான் பிடிக்காத விஷயமாயிற்றே!'' என்றேன் சிரித்துக் கொண்டே.

''நான் நினைத்தேன். இப்படித்தான் இருக்க வேண்டும் என்று. பாருங்கள், நானும் அந்த முடிவுக்கே வந்துவிட்டேன். நிச்சயமாக இந்த வாழ்க்கையில் நிம்மதி இருக்கிறது. பிக்கல் பிடுங்கல் இல்லை. கல்யாண பந்தம் என்றால் எவ்வளவு தொல்லை?'' என்றாள்.

என்னைப் பழிப்பது போன்ற முக பாவம்.

''இப்படிப் பேசிக் கொண்டேதான் இருக்க வேண்டுமா?'' என்று கேட்டுக் கொண்டே தான் எழுந்தேன்.

''இதோ இருங்கள். நான் வருகிறேன்....'' என்று கூறிக் கொண்டே அவள் பாத்ரூமுக்குள் போய்க் கதவைத் தாளிட்டுக் கொண்டாள்.

நான் எழுந்து என் சட்டையைக் கழற்றினேன். வழக்கம்போல் மணிபர்ஸை எடுத்துத் தலையணைக்கடியில் பத்திரப்படுத்தி வைத்தேன்.

அறை வசதியாகத்தான் இருந்தது. 'இப்போது எல்லா ஹோட்டல்களும் அறைகளும் வசதியாகத்தான் இருக்கின்றன' என்று நினைத்துக் கொண்டே இங்குமங்கும் நடந்தேன்.

அடுத்தபடியாக என்ன செய்ய வேண்டும் என்பதையும் அப்போதே முடிவு கட்டிக் கொண்டேன். அவள் தூங்கும்போது வெளியேறிவிட வேண்டும். இல்லாவிடில் இவள் பிடியில் நிரந்தரமாகச் சிக்கிக் கொள்ள வேண்டியிருக்கும். பழைய காதலி அல்லவா?

பத்து நிமிடங்கள் ஆயின. அவள் இன்னமும் வெளியே வரக் காணோம்! வெளியே வராமல் எங்கே போகிறாள் என்கிற நம்பிக்கையுடன் இருந்தேன்.

அப்போதுதான் மேஜையின் மீது வைக்கப்பட்டிருந்த அவள் கைப் பையைக் கவனித்தேன். எடுத்து அதைத் திறந்தேன்.

அதற்குள் கொஞ்சம் பணமும் ஒரு கடிதமும் இருந்தன. கடிதத்தை எடுத்துப் பிரிப்பதற்குள் அவள் வெளியே வரும் சத்தம் கேட்டது. பையை மூடி வைத்துவிட்டுப் படுக்கைக்கு வந்தேன். வெளி வந்தவள் தடுமாறினாள். அவளால் நிற்கக்கூட முடியவில்லை. நான் திடுக்கிட்டு எழுந்தேன்.

'' என் கதை முடிந்தது. இனிமேல்தான் உங்கள் கதையின் ஆரம்பம்....'' என்றாள்.

எனக்கு எதுவுமே புரியவில்லை. நான் அவள் அருகில் செல்வதற்குள் அவள் படுக்கையில் விழுந்துவிட்டாள்.

'' என்ன சுகுணா இது....?'' அவளைத் தொட்டுத் தூக்கினேன். துவண்டாள். உடம்பு ஜில்லிட்டுவிட்டது.....

ஒரு நிமிடம் எனக்குத் தலை சுற்றியது. பிறகுதான் விஷயம் புரிந்தது. அவள் இறந்து கிடக்கிறாள். விஷம் குடித்திருக்க வேண்டும். உடல் நீலமாகிவிட்டிருந்தது.

அங்கேயே...அதே நிலையிலேயே அவளை விட்டு விட்டு ஓடுவதைத் தவிர எனக்கு வேறு வழியிருக்கவில்லை. ஆனால்.... என் மனத்தில் ஒரு பயம். திட்டமிட்டுத்தான் அவள் இப்படிச் செய்திருக்கிறாளா? அவசர அவசரமாகப் பையிலிருந்த கடிதத்தை எடுத்துப் படித்தேன்.

''அன்பில்லாதவரே,

உங்களால் ஏமாற்றப்பட்ட நான், இன்னொருவரை ஏமாற்றி மண மேடையில் அமர விரும்பவில்லை. அதனால் நகைகளுடன் வீட்டை விட்டு வெளியேறி இங்கே வந்தேன். உங்களைக் கண்டு பிடித்து உங்களுடனேயே வாழ வேண்டும் என்பது என் விருப்பம். ஆனால் இங்கே உங்கள் கதையைக் கேட்டால்...? என் நம்பிக்கை சிதைந்துவிட்டது. குறுகிய காலத்துக்குள் நான்கு பெண்களின் எதிர்காலத்தைக் காதல் என்கிற பெயரால் சூறையாடியிருக்கிறீர்கள். கிளைக்குக் கிளை குரங்கு தாவலாம். அது அதனுடைய வாழ்க்கைக் குணம். அதைப் பார்த்து மனிதன் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முடியுமா? குரங்குக்கு நிரந்தரமான இடம் கிடையாது. மனிதன் அப்படி இருக்க முடியுமா? ஒருவனுக்கு ஒருத்தி என்கிற நியதியைப் பொய்யாக்குபவன் மிருகம். என் கண்ணெதிரில் இப்படி ஒரு மிருகம் வளருவதை நான் விரும்பவில்லை. உங்களுக்குத்தான் விஷத்தைக் கொண்டு வந்தேன். ஆனால் என் மனம் இக்கடிதத்தை எழுதும்போது மாறிவிட்டது. நீங்கள் அவ்வளவு எளிதில் சாகக் கூடாது. என் தற்கொலைக்கு நீங்கள்தான் காரணமென, நீங்கள் ஊராரால் தூற்றப்பட வேண்டும். அதற்குப் பிறகு நீங்கள் இருந்தாமல் இருக்கமாட்டீர்கள். நம்பிக்கை இருக்கிறது. கடந்த பல தினங்களாக இந்த ஹோட்டலில்தான் இருந்தேன்.... கௌரவ

# நவீனமான வெளித்தோற்றம்
# அதை மிகைப்படுத்துகிறது
# பல பயனுள்ள

**ஸில்விக்ரீட்**
எஸிஸி வெள்ளை சிமெண்ட்



கட்டிடங்களுக்கும், கூடார மண்டபங்களுக்கும் வெளிப்புறத்தில் அலங்காரத் தோற்றமளிக்கச் சிறந்தது ஸில்விக்ரீட். பற்பல விதமான சுவர் அலங்காரங்களுக்கும், அலங்கார முகப்புகளுக்கும், டைல் அல்லது டெர்ராஸோ தரைகளுக்கும், ஜாலிகளுக்கும், கொடிவீடுகளுக்கும் பயன்படுகிறது ஸில்விக்ரீட். அருகாமையிலுள்ள சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆ:ப் இந்தியா லிமிடெட்டின் கிளை அல்லது அவர்களுடைய விநியோகஸ்தர்களிடமிருந்து ஸில்விக்ரீட் சுலபமாகக் கிடைக்கிறது.

ஸ்னோஸெம் மற்றும் கலர்க்ரீட்டிற்கு ஆதாரப் பொருள் ஸில்விக்ரீட்.

**எஸிஸி** உயர்ந்த தரத்திற்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்

தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம்பெனிஸ் லிட்., • தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆ:ப் இந்தியா லிட்.,

பசியைப் பெருக்குவதோடு நின்றுவிடும் எந்த டானிக்கும் பாதிவேலையைத்தான் செய்யும்

*

# இன்க்ரிமின் பெறுவீர்..

## உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றும்








*

**சேருவீர் இன்க்ரிமின் இனத்தோடு... வளர்ச்சிக்கான பசியைப் பெறுவீர் வளமுடனே!**

பசியைப் பெருக்குவதோடு மட்டுமின்றி, உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றுகிறது இன்க்ரிமின் டானிக். காரணம், உங்கள் குழந்தை சாப்பிடும் புரதச் சத்துக்களை மேம்படப் பயன்படுத்திக்கொள்ளும் அதிமுக்கியமான அமினோ அமிலம் அதில் அடங்கியுள்ளது.

◀ பெரிய குழந்தைகளுக்கு இரும்புச் சத்து அடங்கிய இன்க்ரிமின் ஸிரப் — 175 மிலி & 57 மிலி. இளங் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ் — 10 மிலி.

# இன்க்ரிமின்*

டானிக் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன.

* அமெரிக்கன் ஸயானமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

Lederle

லின்டாஸ்-INC, 22 - 140 TM

மாக! இனி மேலாவது மற்றப் பெண்களை ஆசை காட்டி மோசம் செய்யாமல் இருங்கள். நீங்கள் திருந்திய பிறகு, உங்கள் தாயிடம் என்னைப் பற்றிச் சொல்லுங்கள். ஏனெனில், உங்கள் சரியான விலாசத்தைக் கொடுத்ததே அவர்கள்தான்! ஒருத்தியுடன் வாழ்வது தான் வாழ்க்கை. ஆனால் இந்த அவல வாழ்க்கையில்தான் நிம்மதி இருக்கிறதென்று சொல்கிறீர்களாமே? இதைவிடச் சாவதே மேல்.

இப்படிக்கு,
கருணா.''

இந்தக் கடிதம் எனக்கு எழுதப்பட்டது தான். என்னைச் சிக்க வைக்க, இங்கே அழைத்து வந்து அவள் தற்கொலை செய்து கொண்டிருக்கிறாளா? பேஷ்! இந்தக் கடிதத்தைக் கிழித்துவிட்டால் என்னை யார் அறிய முடியும்? இவள் தற்கொலைக்கு நான்தான் காரணம் என்று யார் ஊகிக்க முடியும்?

என்னைத் திருத்துகிறாளாம். பைத்தியக் காரி. இன்னொருவர் சொல்லி, திருந்தக் கூடியவனா நான்? கடிதத்தைச் சுக்குநூறாகக் கிழித்து, என் பையில் வைத்துக் கொண்டு, அங்கிருந்து வேகமாக வெளியேறினேன். நல்ல வேளையாக ஹோட்டல் ரிஜிஸ்தரில் பொய் விலாசம் கொடுத்திருக்கிறேன்.

இவளாவது என்னைச் சிக்கவைப்பதாவது? பலமாகச் சிரிக்க வேண்டும் போல் இருந்தது. நான் வெளியேறும்போது, அந்த வாலிபன் தூங்கி வழிந்து கொண்டிருந்தான்.

என் இருப்பிடத்துக்கு நடந்தே வந்து சேர்ந்தேன். அன்று இரவு எனக்குத் தூக்கமே வரவில்லை. கருணாவின் மீது எனக்கு அனுதாபமும் ஏற்படவில்லை. வாழத் தெரியாதவளுக்கு இரக்கப்பட வேண்டுமா? பொழுது விடிந்தது.

காப்பி வாங்கிக் கொண்டு வரப் பையன் வந்து நின்றான். மணிபர்ஸைத் தேடினேன். அது எங்கே இருக்கிறது? அதுதான் அங்கே தலையணை அடியில் தங்கிவிட்டதே. உடல் 'குப்'பென்று வியர்த்தது. அதில் என் பெயர் விலாசம் எல்லாம் எழுதி வைத்திருக்கிறேனே!

போலீஸார் உள்ளே வந்தபோது, ஹோட்டல் வாலிபனும் அவர்களுடன் இருந்தான்.

''கருணா என்கிற பெண்ணை கொலை செய்ததற்காக உங்களைக் கைது செய்கிறேன்.'' சப்-இன்ஸ்பெக்டர் இப்படித்தான் சொல்லியிருக்க வேண்டும். என் காதில் விழவில்லை. கருணாவின் கடிதத்தை நான் மனத்துக்குள் ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தேன். அவள் ஜெயித்து விட்டாள். தண்டனை இனிமேல் ஆரம்பம்!

## நீங்காத நினைவுக்கு...

ஞாபக சக்திக்கு இதோ ஒரு சிறந்த வழி.

ஓர் ஆழாக்கு கடலைப் பருப்பில் நூறு கிராம் தேங்காயெண்ணெயைக் கலந்து நன்றாக அரைத்துப் பத்து வெந்தயம், இருபது மிளகு வைத்துப் பொடி செய்யுங்கள். அரை தம்ளர் தண்ணீரை மிதமாகக் கொதிக்க வைத்து அதில் ஊற்றுங்கள். இந்தக் கலவையில் அரைப் படி சர்க்கரையைச் சேர்த்துச் சரியாக ஒரு மணி நேரம் வெய்யிலில் காய வையுங்கள். பிறகு அதைப் பொடியாக்கிக் கடலை எண்ணெயைக் கலந்து கால் பங்கு சீரகம் சேர்த்து வாணலியில் வறுத்தெடுத்து ஒரு டப்பாவில் போட்டுக் கூவத்தில் தூக்கியெறிந்துவிட்டு நீங்கள் இதுவரை செய்ததையெல்லாம் ஒவ்வொன்றாகச் சிந்தித்துப் பாருங்கள். ஞாபக சக்தி தானாக வளரும்!

--கோட்டா மோகன்



''ஸ்கூட்டர் ஆக்ஸிடண்ட் ஆனதிலிருந்து நாம் கட்டுண்டோம், பொறுத்திருப்போம், காலம் மாறும், கண்ணே!''

வேறு மாநிலத்தவர்: பல்லவா போக்குவரத்துன்னு மாத்திட்டாங்களாமே?

சென்னைவாசி: எங்களைப் பொறுத்தவரை எந்த விருடி 'தள்ளவா போக்கு வரத்'தா மாறுமோன்னுதான் நடுங்கிண்டிருக்கோம்.

- வி. ச. வாசுதேவன்



## போன்மொழிகள்

''போனில் பொய்யும் மெய்யாகும்''

''பொண்ணு சிரிச்சாப் போச்சு; போனை வைச்சாப் போச்சு''

''போன் அருகில் பெண்ணைப் போல''

''உண்டியலும் போனும் போல''

''போன் மணி அடிக்கும்போதுதானா வாசல் மணியும் அடிக்கணும்!''

''சினிமா நடிகை வீட்டுப் போன் படற பாடு படறேன்''

''குடுக்கிற தெய்வம் போனில் கூப்பிட்டுக் கொடுக்கும்!''

''டைரக்டரியில் இல்லாத போன் நெம்பரும் ஆபத்துக்குதவாத நண்பனும் இருந்தென்ன பயன்?''

- ஆர். எம்.


API
















# காரா ?
# கானல் நீரா ?

நடுத்தர வர்க்கத்தினர் வாங்கக்கூடிய விலையில் சிறிய கார்கள் தயாரிக்கப்படவில்லையே; ஒரு கார் வாங்க மூன்று வருஷம் காத்திருக்க வேண்டியிருக்கிறதே; அப்படிப் பொறுத்திருந்து வாங்கினாலும் காரின் தரம் மோசமாகவும் விலை மிக அதிகமாகவும் இருக்கிறதே என்றெல்லாம் இங்கு ஏங்குபவர்கள் ரஷ்யாவைப் பார்த்து ஓரளவு ஆறுதல் பெறலாம். ஏனெனில் அங்கும் நிலைமை மோசம்தான். ரஷ்யாவில் கார் வாங்குவது தலைவலி என்றால், வைத்திருப்பது திருகுவலி!

சோவியத் அரசு கார் தயாரிப்பில் முன்னேற்றம் காண வரிந்து கட்டிக் கொண்டிருக்கிறது.

யாருக்காக இது?

வர்க்க பேதமில்லாத சோவியத் சமுதாயத்தில் இருக்கும் 'பெரிய மனிதர்'களுக்காக! கார் வைத்துக் கொள்ளும் அந்தஸ்துடையவர்கள், கார் வாங்குவதற்குப் போதிய பணம் சேர்த்து வைத்திருப்பவர்கள் இவர்கள்.

அமெரிக்கா, பிரிட்டன், மேற்கு ஜெர்மனி போன்ற நாடுகளில் பாட்டாளி மக்களெல்லாம் கார் வைத்துக் கொள்வது என்பது சர்வசாதாரணமாக இருக்கும்போது சோவியத் ருஷியாவிலோ மேற்சொன்ன பெரிய மனிதர்களுக்குக் கூடக் கார் வைத்துக் கொள்வது சிரமமாயிருக்கிறது. பல காரணங்களுள் ஒன்று விலை. ஐந்து ஆண்டுகள் பழகிப்போன ஃபியட்-124 வாங்க 5500 ரூபிள் கொடுக்க வேண்டும். அரசாங்க நாணயமாற்று விதப்படி இது ஆறாயிரம் டாலராகிறது. இத்தாலியில் இதே ஃபியட்-124 கார் 1732 டாலருக்கு விற்று வந்திருக்கிறது.

'லிகுளி' என்று ரஷ்யாவில் ஃபியட்-124 காருக்குப் பெயர். இத்தாலியப் பொறியியலாளர்கள் வால்கா ஆற்றின் கரையில் டொக்ளியாட்டி நகரில் அமைத்துள்ள தொழிற்சாலை இந்தக் காரைத் தயாரிக்கிறது.

புதிய ஜி. ஏ. எஸ்.—24 காரின் விலையும் ஏறிவிட்டது. ரஷ்யர்களுக்கு இந்தக் காரை 9,900 டாலருக்குச் சமமான தொகைக்கு விற்கின்றனர். ஆனால் அந்நிய நாட்டினர் இதே காரை 2055 டாலருக்கு வாங்கலாம். இஸட். ஏ. இஸட்-966 என்ற காரின் விலை மிக மிக அதிகம்.

ரஷ்யாவில் தயாராகும் கார்களில் பத்துக்கு மூன்றுதான் தனியார் வாங்குவதற்குக் கிடைக்கும். பத்துக்கு மூன்று கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. எஞ்சியுள்ளவற்றை சோவியத் அரசாங்க உபயோகத்துக்கு ஒதுக்கி வைக்கின்றனர்.

மேற்கு ஐரோப்பாவில் ரஷ்ய மோட்டார் கார் ஏதும் விலை போகாது. மேற்கு ஐரோப்பா என்ன, சுதந்திர உலகில் எங்குமே ரஷ்யக் காருக்குக் கிராக்கி இல்லை. மேலை நாட்டு ''மாடல்களுக்கு'' அருகே ரஷ்ய கார் நிற்க முடியாது.

ரஷ்யாவிலே பகீரதப் பிரயத்தனம் செய்துதான் கார் வாங்க வேண்டும். ஆனால் இந்தக் கஷ்டம் பிரச்னையின் ஒரு சிறு பகுதிதான்.

---

படம்: சாலையின் பாதிப் பகுதியில், நான்கு வரிசைகளில் தொழிலகங்களை நோக்கித் தங்கள் கார்களில் அமெரிக்கர்கள் விரைவது அந்நாட்டில் சர்வசாதாரணமான காட்சி.



கூட்டுப் பண்ணை தலைமையகத்திலிருந்து வெளிவருபவர் : ''சீக்கிரம் போங்கள்! சீக்கிரம்! மாவட்ட கேந்திரத்திற்கு மாற்று உறுப்புக்கள் ஒரு நடை வந்து சேர்ந்திருக்கிறதாம்!''

(க்ரோகோடில் என்ற மாஸ்கோ பத்திரிகையில் வெளியான கார்ட்டூன்.)

சொந்தத்தில் கார் வைத்திருப்பவர்களுக்குக் காரை நிறுத்தி வைப்பதற்கு இடம் கிடையாது. தெருவில்தான் விட்டு வைக்க வேண்டும். 'கார் ஷெட்' என்றால் என்ன என்று தெரியாதவர்கள் ரஷ்ய மக்கள்.

மாற்று உறுப்புக்கள் வேண்டுமா? கிடைப்பது குதிரைக் கொம்பான காரியம்தான் என்பதை மாஸ்கோ பத்திரிகை ஒன்று ஒரு கார்டூனில் தெளிவுபடுத்தியிருந்தது. இந்தக் கார்டூனில் கார்களும், டிராக்டர்களும், லாரிகளும் குதிரைகள் பூட்டிச் செலுத்தப்படுவதைக் காண்கிறோம். மாற்று உறுப்புக்களைக் கள்ளச் சந்தையில் யானை விலை, குதிரை விலை கொடுத்துத்தான் வாங்கவேண்டும். அரசாங்க விலைக்குப் பத்து மடங்கு கொடுக்க வேண்டும். இன்னும் எவ்வளவோ எரிச்சல்கள்.

மேலே கூறிய டொக்ளியாட்டி கார் தொழிற்சாலையின் மாஸ்கோ பிரதிநிதி ஒருவர் கம்ஸொமொல்ஸ்கயா ப்ராவ்தா என்ற ஏட்டின் நிருபருக்கு அண்மையில் வழங்கிய பேட்டியில் தமது எரிச்சலைக் கொட்டி விட்டார்.

புதிய கார் வாங்கும் தேதியிலிருந்து ஓராண்டுக்கு ரஷ்யக் கார்களுக்கு உத்தரவாதம் உண்டு. கார்ச் சொந்தக்காரர்கள் சிறப்புப் பணி நிலையங்களில் தம் கார்களை இந்த உத்தரவாதப்படி பழுது பார்த்துக் கொள்ளும் உரிமை உண்டு. ரஷ்யாவிலே மொத்தம் 48 நிலையங்கள் இருக்கின்றன. ஆனால் எல்லா நிலையங்களிலும் ''மெக்கானிக்குகள்'' குறைவு, மாற்று உறுப்புக்களும் இல்லை என்றார் இந்தத் தொழிற்சாலை அதிகாரி.

நிருபர் சொன்னதாவது: ''எங்கள் பத்திரிகைக்கு வரும் கடிதங்களிலே மிகக் கடுமையான பிரச்னைகளில் ஒன்று குறித்துப் புகார்கள் இருக்கின்றன — உத்தரவாத காலத்திலும்கூட இருக்கும் கடுமையான பிரச்னை — இது எண்ணெய் பற்றாக்குறைதான்.''

''உயர்தர எண்ணெய் பற்றிய பிரச்னை தீர்க்கப்பட்டு விட்டது. பெரும் அளவிலே நாங்கள் அதைத் தயாரிக்கிறோம்'' என்றார் அந்த அதிகாரி.

''பின் என்ன? என்ன தொல்லை?'' என்று நிருபர் கேட்டார்.

''பிரச்னை, தாறுமாறான, குளறுபடியான நிர்வாகம் தான். ஒன்றிரண்டு லிட்டர் எண்ணெய் வேண்டுமென வரும் கார் சொந்தக்காரருக்கு முழு பீப்பாய் எண்ணெய் கொடுக்கிறார்கள்.''

''ஏன்? எண்ணெய் அந்த அளவுக்கு ஏராளமாய் உற்பத்தியாகிறதா என்ன?''

''இல்லை, இல்லை. சிறு குவளைகள் எங்குமே கிடைக்காததுதான் காரணம். அதனால் பீப்பாயோடு வாங்கிக்கொள் என்கிறார்கள்! என்றாலும் இந்தப் பிரச்னையும் இப்பொழுது ஆராயப்படுகிறது'' என்றார் அதிகாரி.

உலகின் நிலப்பரப்பில் ஆறில் ஒரு பங்கு ரஷ்யாவில் இருக்கிறது. ஆனால் நெடுஞ்சாலைகளின் நீளம் 9,25,000 மைல்கள்தான். இதில் 28 சதவிகிதத்துக்குத்தான் கார் போக்குவரத்துக்குத் தகுதியாகச் சரளைக்கல் போட்டிருக்கிறார்கள். எஞ்சியுள்ள சாலைகள் ஆண்டின் பெரும் பகுதிக் காலம் போக்குவரத்துக்குத் தகுதியற்றவை.

1970ம் ஆண்டு நிலவரம் இது: அமெரிக்காவிலே மூவரில் ஒருவருக்குக் கார் சொந்தம்; பிரிட்டனில் அறுவருக்கு ஒருவர். ரஷ்யாவில் 200 பேருக்கு ஒருவர். எனவே ரஷ்யாவில் போக்குவரத்து நெரிசல் மிகக் குறைவு என்று சொல்லலாம் அல்லவா? அப்படியிருந்தும், ரஷ்யாவில் கார் விபத்து மரணம் அதிகம். நெடுஞ்சாலையில் 190 கார், லாரிகளுக்கு ஒரு சாவு விபத்து: அமெரிக்காவில் 1900 ஊர்திகளுக்கு ஒன்று என்ற கணக்கில் ஏற்பட்டது.

அடிப்படை : அலெக்ஸாண்டர்
வி. ககாயெஃப் எழுதிய கட்டுரை.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam




# சலவை செய்யும் கட்டி
# டெடர்ஜென்ட் சக்தி செறிந்தது
















**டெப்** டெடர்ஜென்ட் சலவைக் கட்டி
## சோப்பைவிட 50% அதிக துணிகளை, அதிவெண்மை-யாக சலவை செய்கிறது

—மென்னீரிலும், சாதாரணமாக நுரைவிடாத நீரிலும்

